# संस्कृतश्रीः

## पाठमाला – २

# ஸம்ஸ்க்ருதஶ்ரீ:

## பாடமாலா - 2




*Published by*

**SAMSKRIT EDUCATION SOCIETY** [REGD.]

*Head Office :*
148-150, Luz Church Road,
Chennai-600 004.
Phone : **2466 14 01**.

*Admn. Office :*
283, T.T.K. Road,
Chennai - 600 018.
Ph: **2499 2155**

**Eleventh Edition]** **2004** **[Rs. 25-00**

## ஸம்ஸ்க்ருதஸ்ரீ பத்திரிகை பாடமாலா

மொழிப்பயிற்சி மிக எளிதானது. கருத்துடன் ஊன்றிப்பயிலத் தொடங்கினால் ஓராண்டிற்குள் மொழி வசப்படத் தொடங்கும். பிறகு மொழியிலுள்ள சிறிதும் பெரிதுமான நூல்களை படித்துப் பழகப்பழக மொழி நன்கு வசப்பட்டுவிடுகிறது. மொழியின் இலக்கணமும் கற்பதற்கு எளிதே. தொடர்ந்து கருத்துடன் ஊன்றி ஈடுபடுவதே இதற்கான ஒரே உபாயம். நாம் நன்கு அறிந்த மொழி ஒன்றின் உதவி கொண்டு வேற்று மொழி கற்பதும் மிக எளிது. அந்தந்த மொழியின் தனிச் சிறப்பும் பழகப் பழகத்தானே புரியும். இதைக் கருத்தில் கொண்டே தமிழின் மூலம் ஸம்ஸ்க்ருதத்தைக் கற்பதற்கு உதவுவது என்ற நோக்குடன் 1977ல் காஞ்சீ காமகோடி பீடாதிபர் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் நல்லாசியுடன் ஸம்ஸ்க்ருதஸ்ரீ துவங்கப் பெற்றது.

பத்திரிகை மூலம் போதித்துத் தபால் மூலம் பயிற்சியில் உதவுவதானது. நேர்முகமாக வகுப்பறைகளில் போதிப்பது போல், எளிதாக அமைய வேண்டுமென்ற கருத்துடன் முயன்றதில் ஓரளவு வெற்றி பெற்றுள்ளோம். தொடர்ந்து இப்பத்திரிகையின் வாசகர் வட்டம் பெருகிவருகிறது.

ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் பாடங்களுடன் எளிய சிறிய சிறந்த கட்டுரைகள், ஸம்பாஷணைகள், சிறு நாடகங்கள், மற்றும் செய்யுள்கள், ஸ்தோத்திரங்கள் இவைகளும் இடம் பெற்று வருகின்றன. அவை வாசகர்களுக்கு இலக்கியங்களில் ஈடுபாட்டை வளர்க்க உதவுகின்றன.

ஸம்ஸ்கிருத எழுத்துப்பயிற்சி முதல் உயர்ந்த காவியப் பகுதிகள் வரை எளிய முறையில் பாடங்கள் வரிசையாக அமைக்கப் பெற்று ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் வெளிவந்தன. ஒவ்வொரு பாடத்தின் இறுதியில் அமைந்த பயிற்சிகளை வாசகர்கள் எழுதி எங்களுக்கு அனுப்பித் திருத்தப் பெற்று திரும்பப் பெறுகிறார்கள்.

# संस्कृतश्रीः पाठमाला २

# ஸம்ஸ்கிருதஸ்ரீ பாடமாலா-2



सरस्वति नमस्तेऽस्तु वीणापुस्तकधारिणि।
हंसवाहनमारूढे विद्यादानं कुरुष्व मे॥

## सिंहावलोकनम् — மீள்பார்வை

*காட்டில் வாழும் சிங்கம் தான் முன்னேறிய பாதையை அடிக்கடி திரும்பிப் பார்க்குமாம். அதை 'ஸிம்ஹாவலோகனம்' என்பர். நாம் பாடமாலா முதல் பாகத்தில் கற்றதை மறுபடி ஸிம்ஹாவலோகனம் செய்ய வேண்டும். இதுவரை கற்றவை:*

*ஸம்ஸ்கிருதஸ்ரீ பாடமாலா முதல் பாகத்தில் முதல் 7 பாடங்கள் எழுத்துக்களைப் பற்றியவை. அடிப்படையாக அமைந்தவை. பாடம் 9ல் வாக்கியம் அமைக்கத் தொடங்கினோம். 9-15 பாடங்களில் சிறு சிறு ஸம்பாஷணை வாக்கிய அமைப்புகள் வந்தன. 16-23 பாடங்களில் 2-8 வேற்றுமை வடிவங்களைக் கற்றோம். பாடம் 7லும் தொடர்ந்தும் நிகழ்கால வினைச்சொற்களில் சிலவற்றின் அமைப்பையும் பாடம் 23ல் கட்டளை வினைச்சொற்களையும் கற்றோம்.*

***கற்க வேண்டியவை:***

*உயிர் எழுத்துக்கள் 13ஐயும் இலக்கணத்தில் 'அச்' என்று கூறுவர். உயிரெழுத்துக்களில் முடியும் சொற்களை*

*அச்+அந்தம் = அஜந்தம் என்று கூறுவர். அஜந்தச் சொற்களில் பும்லிங்கத்தில் अ इ उ ऋ எழுத்துக்களில் முடியும் 4 வகை, ஸ்திரீலிங்கத்தில் आ इ ई उ ऊ ऋ எழுத்துக்களில் முடியும் 6 வகை, நபும்ஸகலிங்கத்தில் अ इ उ ऋ எழுத்துக்களில் முடியும் 4 வகைகள், ஆக 14 வகைகள் மட்டும் அதிகம் வழக்கில் உண்டு. மற்ற எழுத்துக்களில் முடியும் சொற்கள் அதிகம் வழக்கில் இல்லாதவை. அஜந்த சப்தங்களின் ஏழு விபக்தி வடிவங்களையும் அவற்றின் மூன்று வசனங்களையும் ஒரு ஒப்புநோக்குதல் மூலம் கற்பது எளிது.*

## अकारान्तः पुलिंगः

| | एक | द्वि | बहु |
|---|---|---|---|
| प्र | अचलः | अचलौ | अचलाः |
| द्वि | अचलं | अचलौ | अचलान् |
| तृ | अचलेन | अचलाभ्यां | अचलैः |
| च | अचलाय | अचलाभ्यां | अचलेभ्यः |
| पं | अचलात् | अचलाभ्यां | अचलेभ्यः |
| ष | अचलस्य | अचलयोः | अचलानां |
| स | अचले | अचलयोः | अचलेषु |
| सं | हे अचल | हे अचलौ | हे अचलाः |

### மற்றும் சில அகாராந்த சப்தங்கள்

| | | | |
|---|---|---|---|
| देवः | தேவன் | वर्गः | தொகுப்பு |
| अच्युतः | விஷ்ணு | गुणः | குணம் |
| अश्वः | குதிரை | रसः | சுவை |
| आकाशः | வானம் | मृदङ्गः | மிருதங்கம் |
| आनन्दः | ஆனந்தம் | बालः | சிறுவன் |

## आकारान्तः स्त्रीलिङ्गः

| | | | |
|---|---|---|---|
| प्र | माला | माले | मालाः |
| द्वि | मालां | माले | मालाः |
| तृ | मालया | मालाभ्यां | मालाभिः |
| च | मालायै | मालाभ्यां | मालाभ्यः |
| प | मालायाः | मालाभ्यां | मालाभ्यः |
| ष | मालायाः | मालयोः | मालानां |
| स | मालायां | मालयोः | मालासु |
| सं | हे माले | हे माले | हे मालाः |

### மற்றும் சில ஆகாராந்த சப்தங்கள்

| | | | |
|---|---|---|---|
| सीता | *சீதை* | रथ्या | *தெரு* |
| गाथा | *கதை* | प्रभा | *ஒளி* |
| बाला | *சிறுமி* | रमा | *லட்சுமி* |

இவை माला *சப்தம்போல்*

## अकारान्तः नपुंसकलिङ्गः

| | | | |
|---|---|---|---|
| प्र | वनं | वने | वनानि |
| द्वि | वनं | वने | वनानि |
| तृ | वनेन | वनाभ्यां | वनैः |
| च | वनाय | वनाभ्यां | वनेभ्यः |
| प | वनात् | वनाभ्यां | वनेभ्यः |
| ष | वनस्य | वनयोः | वनानां |
| स | वने | वनयोः | वनेषु |
| सं | हे वन | हे वने | हे वनानि |

## மற்றும் சிலஅகாராந்த சப்தங்கள்

| | | | |
|---|---|---|---|
| बलं | வலிவு | जलं | நீர் |
| सलिलं | நீர் | राज्यं | அரசு |

இவை वन சப்தம்போல்

குறிப்பு:

1. துவிவசநச் சொற்கள் 1-2 வேற்றுமைகளிலும், 3-4-5 வேற்றுமைகளிலும், 6-7 வேற்றுமைகளிலும் ஒரே மாதிரியாக உள்ளன. பஹுவசநச் சொற்கள் 4, 5 வேற்றுமைகளில் ஒன்று போலுள்ளன.

2. முதல் வேற்றுமையும் விளிவேற்றுமையும் சிறிதளவே வேறுபடுகின்றன.

3. நபும்ஸகலிங்கச் சொற்கள் 1-2 வேற்றுமைகளில் ஒன்றுபோலவே உள்ளன. வேற்றுமை சிறிதும் இல்லை. அகாராந்த நபும்ஸகலிங்கச் சொற்கள் 3ம் வேற்றுமையிலிருந்து 7ம் வேற்றுமை வரை புல்லிங்கச் சொற்களைப் போலவே இருக்கின்றன. எனவே, நபும்ஸகலிங்கச் சொற்களைக் கற்க 1-2 வேற்றுமையைக் கற்றாலே போதுமானது. மற்றவை பும்லிங்கத்தைப் போலவே கூறலாம்.

4. ஸ்திரீலிங்கத்தில் 'अ' (குறில்)வில் முடியும் சொல் இல்லை. எனவே, அதிகம் வேறுபாடில்லாத 'आ' (நெடில்) வில் முடியும் சொல்லை இடையே தந்தோம். எந்த அளவிற்கு ஒற்றுமை காணப்படுகிறது என்பதை கவனிக்கவும்.

அகாராந்தமான புல்லிங்க - நபும்ஸகலிங்க சப்தங்கள் சிலவற்றில் 3ம் விபக்தி ஏகவசனத்திலும், 6ம் விபக்தி பஹுவசனத்திலும் விபக்தியந்தமாக வருகின்ற न எழுத்து

ण வாகிவிடும். பாடமாலா முதல் பாகம் பாடம் 10ல் கொடுக்கப்பட்டுள்ள அகாராந்த சப்தங்களில் अमरः, कुमारः, ज्वरः, मृगः, वीरः, धर्मः, नरकः, पुरुषः, मयूरः, सर्पः, सूर्यः, गौरवं, द्वारं, पीतांबरं, विषं नगरं, रूपं, शरीरं என்ற சப்தங்களிலும் இப்பாடத்தில் கொடுக்கப்பட்டுள்ள वर्गः रामः முதலியவற்றிலும் இந்த 'ண' மாற்றம் உண்டு.

உதாரணம்: अमरेण, अमराणां, कुमारेण, कुमाराणां, ज्वरेण, ज्वराणां, रामेण, रामाणां என்றவாறு ஒரே பதத்தில் र, ष எழுத்துக்களுக்குப் பின்வரும் 'ந' எழுத்து 'ண'வாகி விடுகிறது. பின் இலக்கணம் பற்றிய பாடங்களில் இந்த 'ண' மாற்றம் விளக்கப் பெறும். இந்த 'ண' மாறுதல் மற்ற சொற்களிலும் வரும். இதனை அவ்வப்போது கற்போம்.

## इकारान्तः पुंलिङ्गः

| | | |
|---|---|---|
| हरिः | हरी | हरयः |
| हरिं | हरी | हरीन् |
| हरिणा | हरिभ्यां | हरिभिः |
| हरये | हरिभ्यां | हरिभ्यः |
| हरेः | हरिभ्यां | हरिभ्यः |
| हरेः | हर्योः | हरीणां |
| हरौ | हर्योः | हरिषु |
| हे हरे | हे हरी | हे हरयः |

மற்றும் சில இகாராந்த சப்தங்கள்:

| | | | |
|---|---|---|---|
| निधिः | புதையல் | रश्मिः | கிரணம் |
| अतिथिः | விருந்தாளி | राशिः | குவியல் |
| अलिः | வண்டு | ध्वनिः | ஒலி |

| | | | |
|---|---|---|---|
| व्याधिः | நோய் | दुन्दुभिः | பறை |
| अद्रिः | மலை | आधिः | மனநோய் |

[अद्रिणा, अद्रीणां]

## इकारान्तः स्त्रीलिङ्गः

| | | |
|---|---|---|
| मतिः | मती | मतयः |
| मतिं | मती | मतीः |
| मत्या | मतिभ्यां | मतिभिः |
| मतये | मतिभ्यां | मतिभ्यः |
| मतेः | मतिभ्यां | मतिभ्यः |
| मतेः | मत्योः | मतीनां |
| मतौ | मत्योः | मतिषु |
| हे मते | हे मती | हे मतयः |

| | | | |
|---|---|---|---|
| यष्टिः | கம்பு | वृष्टिः | மழை |
| नीतिः | நீதி | कान्तिः | ஒளி |
| गतिः | புகலிடம் | कीर्तिः | புகழ் |
| भीतिः | பயம் | भूमिः | பூமி |
| शक्तिः | வலிமை | धूलिः | தூசி |
| उन्नतिः | பெருமை | बुद्धिः | புத்தி |
| मूर्तिः | உருவம் | रात्रिः | இரவு |

[रात्रीणां]

## इकारान्तः नपुंसकलिंगः

| | | |
|---|---|---|
| वारि | वारिणी | वारीणि |
| वारि | वारिणी | वारीणि |

| | | |
|---|---|---|
| वारिणा | वारिभ्यां | वारिभिः |
| वारिणे | वारिभ्यां | वारिभ्यः |
| वारिणः | वारिभ्यां | वारिभ्यः |
| वारिणः | वारिणोः | वारीणां |
| वारिणि | वारिणोः | वारिषु |
| हे वारे-वारि | हे वारिणी | हे वारीणि |

இகராந்த நபும்ஸக சப்தங்கள் மிகக் குறைவு.

குறிப்பு:

1. ஸ்திரீ லிங்கத்தில் இரண்டாம் வேற்றுமை பன்மையும், மூன்றாம் வேற்றுமை ஒருமையும் பும்லிங்கத்திலிருந்து வேறுபடுகின்றன. மற்ற இடங்களில் வேறுபாடு இல்லை.

2. நபும்ஸகலிங்கத்தில் முதல் இரண்டு வேற்றுமைகளும் ஒன்றுபோல் வருகின்றன. 8ம் வேற்றுமை, முதல் வேற்றுமையிலிருந்து சற்று வேறுபடுகிறது. ஆனால் 4, 5, 6, 7 வேற்றுமை ஒருமைகளிலும் 6, 7 வேற்றுமை இருமைகளிலும் வேறுபாடு காணப்படுகின்றது.

## उकारान्तः पुंलिङ्गः

| | | |
|---|---|---|
| शम्भुः | शम्भू | शम्भवः |
| शम्भुं | शम्भू | शम्भून् |
| शम्भुना | शम्भुभ्यां | शम्भुभिः |
| शम्भवे | शम्भुभ्यां | शम्भुभ्यः |
| शम्भोः | शम्भुभ्यां | शम्भुभ्यः |
| शम्भोः | शम्भ्वोः | शम्भूनां |
| शम्भौ | शम्भ्वोः | शम्भुषु |
| हे शम्भो | हे शम्भू | हे शम्भवः |

| | | | |
|---|---|---|---|
| परशुः | கோடாரி | बाहुः | கை |
| प्रभुः | எஜமானன் | रिपुः | எதிரி |
| वायुः | காற்று | सेतुः | அணை |
| हेतुः | காரணம் | वेणुः | மூங்கில் குழல் |
| शिशुः | குழந்தை | मेरुः | மேருமலை |
| इक्षुः | கரும்பு | स्थाणुः | சிவன் |
| तन्तुः | நூல் | गुरुः | குரு |

[प्रभुणा, प्रभूणां, मेरुणा, मेरूणां, गुरुणा, गुरूणां]

उकारान्तः स्त्रीलिङ्गः

| | | |
|---|---|---|
| धेनुः | धेनू | धेनवः |
| धेनुं | धेनू | धेनूः |
| धेन्वा | धेनुभ्यां | धेनुभिः |
| धेनवे, धेन्वै | धेनुभ्यां | धेनुभ्यः |
| धेनोः, धेन्वाः | धेनुभ्यां | धेनुभ्यः |
| धेनोः, धेन्वा | धेन्वोः | धेनूनां |
| धेनौ, धेन्वां | धेन्वोः | धेनुषु |
| हे धेनो | हे धेनू | हे धेनवः |

चञ्चुः பறவையின் அலகு

उकारान्तः नपुंसकलिङ्गः

| | | |
|---|---|---|
| मधु | मधुनी | मधूनि |
| मधु | मधुनी | मधूनि |
| मधुना | मधुभ्यां | मधुभिः |
| मधुने | मधुभ्यां | मधुभ्यः |
| मधुनः | मधुभ्यां | मधुभ्यः |

| | | |
|---|---|---|
| मधुनः | मधुनोः | मधूनां |
| मधुनि | मधुनोः | मधुषु |
| हे मधो, मधु | हे मधुनी | हे मधूनि |

| | | | |
|---|---|---|---|
| वसु | செல்வம் | गुरु | கனமான |
| वस्तु | பொருள் | मृदु | மென்மையான |
| तालु | தாடை | कटु | உரைப்பான |
| लघु | லேசான | सानु | மலைச் சமவெளி |

[गुरुणा, गुरूणां]

விசேஷணமாக வரும் லகு முதலிய சப்தங்களில் சில தனி ரூபங்கள் உண்டு. அவற்றைப் பிறகு கற்போம்.

## द्वितीयः पाठः — பாடம் 2

ஏழு விபக்திகளைப் பற்றிப் பொதுவாகத் தெரிந்து கொண்டோம். அ, இ, உ என்ற எழுத்துக்களில் முடியும் சப்தங்கள் ஏழு விபக்திகளிலும் பெறும் வடிவங்களையும் பொதுவாகக் கற்றோம். கற்றவரையில் அவற்றை சிறு சிறு வாக்கியங்களாக அமைத்துப் பழகுவோம். முன் பழகிய சொற்களைக் கொண்டே அமைந்துள்ளபடியால் ஸம்ஸ்கிருதத்தில் உள்ளதைத் தமிழிலும், தமிழில் உள்ளதை ஸம்ஸ்கிருதத்திலும் மாற்றி எழுதுங்கள். இப்படி எழுதுவதை अनुवादः என்பர். அந்தப் பயிற்சித் தொகுப்பை अनुवादमाला என்று கூறுவோம்.

### अनुवादमाला — १
(ஸம்பாஷணை)

कः सः बालः ? सः रामुः ।

अयं कः ? अयं दामोदरः ।

माधवः अत्र अस्ति किम्? माधवः अत्र नास्ति। तत्र अस्ति।
सः तत्र किं करोति? सः पाठं पठति।
इदं किम्? इदं फलम्।
तव पाठशाला कुत्र अस्ति? मम पाठशाला दक्षिणतः अस्ति।
कस्य अयं कन्दुकः? रमायाः अयं कन्दुकः।
उमा पठति वा? उमा न पठति।
सीता पठति वा? सीता पठति।
इदं पुस्तकं किं रामस्य उत कृष्णस्य? रामस्य एव इदं पुस्तकम्।

[करोति - *செய்கிறான்;* उत - *அல்லது*]

## अनुवादमाला — २

इयं लेखिनी। सा मम हस्ते अस्ति। तया पत्रे लिखामि। मम पाठं तत्र लिखामि। आचार्यः तं पाठं पश्यति। साधु त्वया लिखितं इति वदति। बालिका उमा अपि मया सह पाठशालां गच्छति। मया सहैव सा पठति। सा सम्यक् पठति।

[लेखिनी - *பேனா;* पश्यति - *பார்க்கிறார்;* साधु - *நன்கு;* लिखितं - *எழுதப்பட்டது.*]

## अनुवादमाला — ३

इयं मे लेखिनी। तस्यां नीला मषी अस्ति। पाठशालायां वृक्षाः सन्ति। लताश्च तत्र सन्ति। लतासु पुष्पाणि सन्ति। पुष्पैः मालां अहं करोमि। त्वं किं खादसि? फलानि रुचिराणि अत्र सन्ति। तव पेटी कुत्र अस्ति? पेटयां पुस्तकं विद्यते।

[मषी - *மை;* रुचिराणि - *ருசிமிக்கவை;* पेटी - *பெட்டி.*]

## अनुवादमाला — ४

का सा बालिका? सा रमा।

सा किं पाठशालां गच्छति?

सा पाठशालां न गच्छति। अपितु गृहं गच्छति।

त्वं पाठशालां कदा गच्छसि? अहं प्रातः पाठशालां गच्छामि।

तस्याः बालिकायाः किं नाम? तस्याः श्यामला इति नाम।

सा किं संस्कृतं पठति? सा संस्कृतं पठति।

रमेशः किं पठति? सः तमिल्भाषां पठति।

त्वं रमेशेन सह कुत्र गच्छसि?

अहं रमेशेन सह उद्यानं गच्छामि।

कृष्णः सत्यं वदति किम्? कृष्णः सत्यं एव वदति।

रमायाः पिता कुत्र अस्ति? रमायाः पिता गृहे अस्ति।

कानि इमानि? इमानि क्रीडनकानि।

(क्रीडनकानि — *விளையாட்டுப் பொருள்கள்*)

## अनुवादमाला — ५

*நான் அங்கே வருகிறேன். நீ பள்ளிக்கூடம் செல்கிறாய். ராமன் அங்கு இல்லை. நான் பள்ளிக்குச் செல்லவில்லை. ராமன் கிருஷ்ணனுக்கு (4 வே) புத்தகத்தைத் தருகிறான். இது எனது பந்து. பந்தினால் நீ விளையாடுகிறாய். தாமோதரன் நகரத்திற்குச் செல்கிறான். மரத்தில் பழங்கள் இருக்கின்றன. நான் பழங்களைச் சாப்பிடுகிறேன்.*

## अनुवादमाला — ६

நீ எங்கு செல்கிறாய்? நான் பள்ளிக்கூடம் செல்கிறேன்.
ராமன் அங்கு இருக்கிறானா? ராமன் அங்கு இல்லை. கிருஷ்ணன் இருக்கிறான்.

கிருஷ்ணன் எங்கு செல்கிறான்? கிருஷ்ணன் வீட்டிற்குச் செல்கிறான்.

மரத்தில் என்ன இருக்கிறது? மரத்தில் பழங்கள் உள்ளன.

அந்தப் பழம் எங்கே? அந்தப் பழம் சீதையிடம் உள்ளது.

இந்தச் சிறுவன் யார்? இந்தச் சிறுவன் என்னுடைய நண்பன்.

இது என்ன? இது விளக்கு.

ராமனின் கையில் என்ன இருக்கிறது? ராமனின் கையில் பேனா இருக்கிறது.

பேனாவால் என்ன செய்கிறாய்? பேனாவால் எழுதுகிறேன்.

இது யாருடைய பேனா? இது ராமனின் பேனா.

## तृतीयः पाठः — பாடம் 3

### ஒரு சம்பாஷணை

காளிதாஸர் உஜ்ஜயினி நகரத்தைச் சேர்ந்த கவி. ஒருநாள் காலையில் ஓலைச்சுவடியும் கையுமாகப் பள்ளிக்கு தத்தா தத்தா என்று குதித்தோடும் சிறுமியை அவர் கண்டார். அவளும் அவரும் பேசியது—

कालिदासः — का त्वं बाले ?

बाला — काञ्चनमाला।

कालिदासः — कस्याः पुत्री ?

बाला — कनकलतायाः।

कालिदासः — हस्ते किं ते?
बाला — तालीपत्रम्।
कालिदासः — का वा रेखा?
बाला — का खा गा घा

*இதன் செய்யுள் வடிவம் பின்வருமாறு:*

का त्वं बाले काञ्चनमाला कस्याः पुत्री कनकलतायाः।
हस्ते किं ते तालीपत्रं का वा रेखा का खा गा घा॥

*இதன் வசன வடிவம்*

बाले! त्वं का? (अहं) काञ्चनमाला। (त्वं) कस्याः पुत्री? कनकलतायाः (पुत्री)। ते हस्ते (किं अस्ति)? (मे हस्ते) तालीपत्रं (अस्ति)। तत्र का वा रेखा? (तत्र) का खा गा घा।

(तालीपत्रं *பனை ஓலை — முன்னர் காகிதமாகப் பயன்பட்டது;* रेखा *எழுத்து, வரிவடிவம்)*

## चतुर्थः पाठः — பாடம் 4

### अनुवादमाला — ७

*தமிழில் மொழிபெயர்க்கவும்.*

सः बालाभ्यां सह ग्रामं गच्छति। त्वं कर्णाभ्यां आकर्णयसि। योधाः बाणैः युध्यन्ति। माणवकाः गुरुभिः सह आगच्छन्ति। भिक्षुः आहाराय अटति। गुरुः शिष्याय तत्वं उपदिशति। राधा पुत्राभ्यां पाकं करोति। त्वं देवेभ्यः पुष्पं नयसि। जनकः पुत्रेभ्यः धनं संपादयति। त्वं अतिथिभ्यां क्षीरं आनयसि। धनिकः अगतिभ्यः वस्त्राणि यच्छति।

कण्णप्पः शंभवे नेत्रं अर्पयति। अहं पशुभ्यां घासं आनयामि। गुरुभ्यो नमः। पिता पुत्राय कुप्यति। गुरुः शिष्याय क्रुध्यति। बालकः क्रीडनकाय स्पृहयति। कृतघ्नः मित्राय द्रुह्यति। लुब्धः धनिकाय असूयति। गजः महिषात् उन्नतः। तडागः समुद्रात् अल्पः। जनाः जीवनाय ग्रामेभ्यः नगरं आगच्छन्ति। कौरवेभ्यः पाण्डवाः सच्चरित्राः। रविः हरेः बलवान्। हरिः रवेः दुर्बलः। नृपाः शत्रोः राज्यं रक्षन्ति।

[आकर्णयसि - *கேட்கிறாய்;* योधाः - *படை வீரர்கள்;* युध्यन्ति - *சண்டையிடுகிறார்கள்;* अटति - *அலைகிறான்;* उपदिशति - *போதிக்கிறார்;* पाकः - *சமையல்;* अगतिः - *அநாதை;* घासः - *புல்;* सच्चरित्रः - *நன்னடத்தை உள்ளவன்;* कृतघ्नः - *செய்நன்றி மறந்தவன்;* लुब्धः - *பேராசைக்காரன்.*]

## पञ्चमः पाठः — பாடம் 5

ऋकारान्त *சப்தங்களைக் கவனிப்போம். இவை இருவகை. முதல்வகை* पितृ-मातृ *முதலிய உறவுமுறைகளைக் குறிப்பிடும். இவை எட்டு.*

| | | |
|---|---|---|
| पितृ — | पिता | *தந்தை* |
| भ्रातृ — | भ्राता | *உடன்பிறந்தவன்* |
| जामातृ— | जामाता | *மாப்பிள்ளை* |

*இவை மூன்றும் புல்லிங்கங்களில் மட்டுமே.*

| | | |
|---|---|---|
| मातृ — | माता | *தாய்* |
| दुहितृ — | दुहिता | *பெண்* |
| स्वसृ — | स्वसा | *உடன் பிறந்தவள்* |

| | |
|---|---|
| ननान्दृ— ननान्दा | நாத்தி |
| यातृ — याता | கணவனின் சகோதரனின் மனைவி (ஓர்ப்படி) |

இந்த ஐந்தும் ஸ்திரீலிங்கத்தில் மட்டுமே. உறவைக் குறிப்பிடுகின்ற மற்றொரு சொல் नप्तृ. இது இரண்டு லிங்கங்களிலும் வரும். नप्तृ-नप्ता பேரனின் மகன். (புல்லிங்கத்தில்) नप्तृ- नप्त्री பேரனின் மகள். ஸ்திரீலிங்கத்தில் ஈகாராந்தமாக மாறிவிடும்.

இரண்டாம் வகை, பொதுவாக தாதுக்களிலிருந்து விளைவது. செய்பவன், செல்பவன், கொடுப்பவன் என்றவாறு வினைச்சொல்லிற்கான பணியைப் புரிபவன் என்ற பொருளில் அமைபவை. உதாரணம்:

पठितृ-पठ என்ற வினையிலிருந்து வந்தது. படிப்பவன் என்று பொருள். புல்லிங்கத்தில் पठिता पठितारौ पठितारः என்றவாறு வடிவம் பெறும். நபும்ஸகலிங்கத்தில் पठितृ पठितृणी पठितॄणि என்றவாறு வடிவம் பெறும். ஸ்திரீலிங்கத்தில் ஈகாராந்த சப்தமாக மாறி पठित्री पठित्र्यौ पठित्र्यः என்றவாறு வடிவம் பெறும். இவற்றில் சிலவற்றைப் புல்லிங்கம், நபும்ஸகலிங்கம், ஸ்திரீலிங்கம் என்ற வரிசையில் அமைப்போம்.

| | | | | |
|---|---|---|---|---|
| पठ | पठिता | படிக்கிறவன் | पठितृ | पठित्री |
| रक्ष | रक्षिता | காப்பவன் | रक्षितृ | रक्षित्री |
| दा | दाता | கொடுப்பவன் | दातृ | दात्री |
| धा | धाता | படைப்பவன் | धातृ | धात्री |
| गम् | गन्ता | செல்பவன் | गन्तृ | गन्त्री |

| | | | | |
|---|---|---|---|---|
| शास् | शास्ता | ஆள்பவன் | शास्तृ | शास्त्री |
| कृ | कर्ता | செய்பவன் | कर्तृ | कर्त्री |
| दृश | द्रष्टा | பார்ப்பவன் | द्रष्टृ | द्रष्ट्री |
| नी | नेता | இட்டுச் செல்பவன் | नेतृ | नेत्री |

### ऋकारान्तः पुंलिङ्गः नेतृशब्दः

| | | |
|---|---|---|
| नेता | नेतारौ | नेतारः |
| नेतारं | नेतारौ | नेतॄन् |
| नेत्रा | नेतृभ्यां | नेतृभिः |
| नेत्रे | नेतृभ्यां | नेतृभ्यः |
| नेतुः | नेतृभ्यां | नेतृभ्यः |
| नेतुः | नेत्रोः | नेतॄणां |
| नेतरि | नेत्रोः | नेतृषु |
| हे नेतः | हे नेतारौ | हे नेतारः |

### ऋकारान्तः नपुंसकलिङ्गः नेतृशब्दः

| | | |
|---|---|---|
| नेतृ | नेतृणी | नेतॄणि |
| नेतृ | नेतृणी | नेतॄणि |

3-7 பும்லிங்கத்திலுள்ளது போல்

| | | |
|---|---|---|
| हे नेतृ | हे नेतृणी | हे नेतॄणि |

### ईकारान्तः स्त्रीलिङ्गः नेत्रीशब्दः

| | | |
|---|---|---|
| नेत्री | नेत्र्यौ | नेत्र्यः |
| नेत्रीं | नेत्र्यौ | नेत्रीः |
| नेत्र्या | नेत्रीभ्यां | नेत्रीभिः |

| | | |
|---|---|---|
| नेत्र्यै | नेत्रीभ्यां | नेत्रीभ्यः |
| नेत्र्याः | नेत्रीभ्यां | नेत्रीभ्यः |
| नेत्र्याः | नेत्र्योः | नेत्रीणां |
| नेत्र्यां | नेत्र्योः | नेत्रीषु |
| हे नेत्रि | हे नेत्र्यौ | हे नेत्र्यः |

धाता जगत् सृजति।

*படைப்பவர் (பிரம்மன்) உலகைப் படைக்கிறார்.*

दाता दरिद्रेभ्यः धनं यच्छति।

*கொடையாளி ஏழைகளுக்குப் பொருள் தருகிறான்.*

रामः जनकस्य जामाता।

*ராமன் ஜனகனது மாப்பிள்ளை.*

देवकी कृष्णस्य माता।

*தேவகி கிருஷ்ணனது தாயார்.*

राधा वृषभानोः दुहिता।

*ராதா விருஷபானுவின் மகள்.*

कृष्णस्य पत्नी रुक्मिणी।

*கிருஷ்ணனின் மனைவி ருக்மிணி.*

बलरामस्य पत्नी रेवती।

*பலராமனின் மனைவி ரேவதி.*

रुक्मिणी रेवत्याः याता।

*ருக்மிணி ரேவதியின் ஓர்ப்படி.*

रेवती रुक्मिण्याः याता।

*ரேவதி ருக்மிணியின் ஓர்ப்படி.*

वाली सुग्रीवस्य भ्राता।

*வாலி சுக்ரீவனின் சகோதரன்.*

सुभद्रा बलरामकृष्णयोः स्वसा।
*ஸுபத்ரை, பலராமன், கிருஷ்ணன் இவர்களுடைய சகோதரி.*

सुभद्रा रुक्मिण्याः ननान्दा।
*ஸுபத்ரை ருக்மிணியின் நாத்தி.*

याचकाः दातारं प्रशंसन्ति।
*பிச்சைக்காரர்கள் கொடையாளியைப் புகழ்கிறார்கள்.*

जननायकराज्येषु मन्त्रिणः एव शास्तारः।
*ஜனநாயக ராஜ்யங்களில் மந்திரிகளே ஆள்கிறவர்கள்.*

होतुः नेत्रे धूमेन आविले भवतः।
*ஹோமம் செய்பவனது இரு கண்களும் புகையால் கலங்கியவைகளாக ஆகின்றன.*

पिता पुत्रं लालयति। पितामहः पौत्रं लालयति। प्रपितामहः नप्तारं लालयति।
*தந்தை மகனைக் கொஞ்சுகிறார். பாட்டனார் பேரனைக் கொஞ்சுகிறார். பாட்டனாரின் தந்தை பேரன் மகனைக் கொஞ்சுகிறார்.*

नेतुः सुभाषचन्द्रवसोः कीर्तिः महती।
*நேதாஜி (தலைவர்) சுபாஷ் சந்திரவஸுவின் புகழ் பெரிது.*

## षष्ठः पाठः — பாடம் 6

### ऋकारान्त விசேஷ சப்தங்கள்

*சென்ற பாடத்தில் ऋकारान्त சப்தங்களில் முதல்வகை உறவினரைக் குறிப்பிடுபவை என்று குறிப்பிட்டோம். அவற்றின் சிறப்புகள் பின்வருமாறு:*

1. குறிப்பிட்ட லிங்கங்கள் மட்டும் உண்டு.

2. भ्राता भ्रातरौ भ्रातरः भ्रातरं भ्रातरौ என்று குறிலாக.

3. स्वसृ ननान्दृ என்ற சொற்கள் स्वसारौ स्वसारः என நெடிலாகவே ரூபங்களைப் பெறுகின்றன.

4. मातृ முதலிய 5 சப்தங்கள் धात्री, यात्री என்பதுபோல் ஸ்திரீலிங்கத்தில் मात्री, दुहित्री என்று மாறுபடுவது இல்லை..

5. मातृ முதலிய 5 சப்தங்களும் 2-ம் வேற்றுமை பன்மையில் मातॄः दुहितॄः स्वसॄः, ननान्दॄः यातॄः என்ற ஸ்திரீலிங்க ரூபங்களைப் பெறுகின்றன.

இவ்விசேஷங்களைக் கற்க எளிதாகும்படி முழு ரூபங்களையே தருகிறோம்.

| | | |
|---|---|---|
| भ्राता | भ्रातरौ | भ्रातरः |
| भ्रातरं | भ्रातरौ | भ्रातॄन् |
| भ्रात्रा | भ्रातृभ्यां | भ्रातृभिः |
| भ्रात्रे | भ्रातृभ्यां | भ्रातृभ्यः |
| भ्रातुः | भ्रातृभ्यां | भ्रातृभ्यः |
| भ्रातुः | भ्रात्रोः | भ्रातॄणां |
| भ्रातरि | भ्रात्रोः | भ्रातृषु |
| हे भ्रातः | हे भ्रातरौ | हे भ्रातरः |

पितृ जामातृ என்ற புல்லிங்கச் சொற்கள் இதுபோல். இவைகளின் 8 விபக்திகளையும் எழுதி அனுப்பவும்.

| | | |
|---|---|---|
| माता | मातरौ | मातरः |
| मातरं | मातरौ | मातॄः |
| मात्रा | मातृभ्यां | मातृभिः |

மற்றவை भ्रातृ சப்தம்போல, दुहितृ यातृ என்ற இரு ஸ்திரீலிங்கச் சொற்கள் இதுபோல். मातृ, दुहितृ, यातृ சப்தங்களின் 8 விபக்திகளையும் எழுதவும்.

| | | |
|---|---|---|
| स्वसा | स्वसारौ | स्वसारः |
| स्वसारं | स्वसारौ | स्वसॄः |
| स्वस्रा | स्वसृभ्यां | स्वसृभिः |
| स्वस्रे | स्वसृभ्यां | स्वसृभ्यः |
| स्वसुः | स्वसृभ्यां | स्वसृभ्यः |
| स्वसुः | स्वस्रोः | स्वसॄणां |
| स्वसरि | स्वस्रोः | स्वसृषु |
| हे स्वसः | हे स्वसारौ | हे स्वसारः |

ननान्दृ சப்தம் இதுபோல், அதன் விபக்திகளையும் எழுதி அனுப்பவும்.

ஆக ऋकारान्त சப்தங்கள் நமது பொறுமையை மிகவும் சோதிக்கின்றன. சற்று கவனமும், உற்சாகமும் தேவை.

यः गुणैः पितरं प्रीणयति सः पुत्रः।

எவன் பண்புகளால் தந்தையை மகிழ்விக்கிறானோ அவன் மகன்.

या भर्तुः हितं इच्छति सा भार्या।

எவள் கணவனுடைய நன்மையை விரும்புகிறாளோ அவள் மனைவி.

जनिता उपनेता विद्यादाता अन्नदाता भयत्राता एते च पञ्च पितरः।

பெற்றவர், ஆசிரியரிடம் சேர்ப்பித்தவர், கல்வி புகட்டியவர், அன்னமளித்தவர், பயத்திலிருந்து காப்பாற்றியவர் ஆகிய இவர்கள் ஐவரும் தந்தைகள்.

रामः पितुः आज्ञया वनं गच्छति।
*ராமன் தந்தையின் கட்டளையினால் காட்டிற்குச் செல்கிறார்.*

जगतः पितरौ पार्वतीपरमेश्वरौ वन्दे।
*உலகின் பெற்றோர்களான பார்வதி பரமேச்வரர்களை வணங்குகிறேன்.*

माता च पिता च पितरौ।
*தாயும் தந்தையும் பெற்றோர்.*

## अनुवादमाला — ८

पार्वतीपरमेश्वरौ कैलासे वसतः। एकदा पार्वती परमेश्वरं पृच्छति "नाथ! मम पितरौ स्तः। तव पितरौ क्व तिष्ठतः" इति। परमेश्वरः वदति—"पार्वति! त्वं सत्यं वदसि। मम पितरौ न स्तः। किन्तु मम श्वशुरौ स्तः। तव श्वशुरौ क्व तिष्ठतः" इति। पार्वती लज्जिता तिष्ठति।

*பயிற்சி: 1. தமிழில் மொழிபெயர்த்து அனுப்பவும்.*
[स्तः - *இருக்கிறார்கள்;* श्वशुरौ - *மாமனார், மாமியார்கள்,* लज्जिता - *வெட்கமடைந்தவளாக.*]

*பயிற்சி: 2. இப்பாடத்தில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள* ऋकारान्त *சப்தங்கள்:*—पितृ, भर्तृ, जनितृ, उपनेतृ, विद्यादातृ, अन्नदातृ, भयत्रातृ *என்பவை. இவைகளின் ஏதேனும் இரு விபக்திகளின் ரூபத்தை எழுதி அனுப்புங்கள்.*

## सप्तमः पाठः — பாடம் 7

भूतकालः *வினைச்சொற்களின் இறந்தகாலம்.*

गच्छति गच्छतः गच्छन्ति *போன்ற நிகழ்கால வினைச்*

சொற்களையும் गच्छतु गच्छतां गच्छन्तु போன்ற கட்டளை வினைச்சொற்களையும் (பாடமாலா 1-9, 23) கற்றோம். ஒப்பிட்டுப் பார்க்கும்போது விகுதிகள் சிறிது வேறுபடுகின்றன என்பது தெரிய வரும். விகுதிகள் வருமாறு:-

| நிகழ் காலம் | | | கட்டளை வினை | | | இறந்த காலம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ति | तः | अन्ति | तु | तां | अन्तु | त् | तां | अन् |
| सि | थः | थ | — | तं | त | स् | तं | त |
| मि | वः | मः | आनि | आव | आम | अं | व | म |

अभवत् - இருந்தான்; अयच्छत् - கொடுத்தான்; अजनयत् - பெற்றான்; भवति यच्छति जनयति என்ற நிகழ்கால வினைகள் இவ்வாறு மாறுகின்றன. எல்லா இறந்தகாலச் சொற்களிலும் ''अ'' என்ற எழுத்து முன் சேருகிறது தெரியவரும். இனி பாடத்தில் கவனிப்போம்.

पुरा कोसलदेशे दशरथः नाम राजा अभवत्।
முன்பு கோசல நாட்டில் தசரதர் என்ற மன்னர் இருந்தார்.

तस्य कौसल्या कैकेयी सुमित्रा इति भार्याः अभवन्।
அவருக்கு கௌசல்யா, கைகேயி, ஸுமித்திரை என்ற மனைவியர் இருந்தனர்.

किन्तु एकः पुत्रः अपि न अभवत्।
ஆனால், ஒரு மகன்கூட இல்லை.

राजा अश्वमेधेन अयजत्।
அரசர் அசுவமேத யாகத்தால் வழிபட்டார்.

देवता दशरथाय पायसं अयच्छत्।
தேவதை தசரதருக்குப் பாயஸம் அளித்தது.

सः पायसं भार्याभ्यः अयच्छत्।

*அவர் பாயஸத்தை மனைவிகளுக்கு அளித்தார்.*

ताः गर्भिण्यः अभवन्।

*அவர்கள் கர்ப்பிணிகள் ஆனார்கள்.*

कौसल्या रामं अजनयत्। कैकेयी भरतं अजनयत्। सुमित्रा लक्ष्मणं शत्रुघ्नं च अजनयत्।

*கௌஸல்யை ராமனைப் பெற்றாள். கைகேயி பரதனைப் பெற்றாள். ஸுமித்திரை லக்ஷ்மணனையும், சத்ருக்னனையும் பெற்றாள்.*

राजा नितरां अतुष्यत्।

*அரசர் மிகவும் சந்தோஷித்தார்.*

बालाः सर्वाः विद्याः अपठन्।

*சிறுவர்கள் எல்லா வித்தைகளையும் படித்தனர்.*

## இறந்தகால வினைச்சொல்லின் முழு உருவம்

| | | |
|---|---|---|
| अभवत् | अभवतां | अभवन् |
| अभवः | अभवतं | अभवत |
| अभवं | अभवाव | अभवाम |
| अतुष्यत् | अतुष्यतां | अतुष्यन् |
| अतुष्यः | अतुष्यतं | अतुष्यत |
| अतुष्यं | अतुष्याव | अतुष्याम |
| ऐच्छत् | ऐच्छतां | ऐच्छन् |
| ऐच्छः | ऐच्छतं | ऐच्छत |
| ऐच्छं | ऐच्छाव | ऐच्छाम |

| | | |
|---|---|---|
| अजनयत् | अजनयतां | अजनयन् |
| अजनयः | अजनयतं | अजनयत |
| अजनयं | अजनयाव | अजनयाम |

குறிப்பு: इच्छति என்ற வினைச்சொல்லுக்கு இறந்த காலம் ऐच्छत्, ऐच्छतां ऐच्छन् என்று வருகிறது.

பயிற்சி: கீழே நிகழ்கால வினைச்சொற்கள் அமைந்த வாக்கியங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றை இறந்தகால வினைச் சொற்களாக மாற்றி எழுதவும்.

विश्वामित्रः अयोध्यां आगच्छति। (आगच्छत् வந்தார்)
விச்வாமித்திரர் அயோத்திக்கு வருகிறார்.

सः यागं कर्तुं इच्छति।
அவர் வேள்வி செய்ய விரும்புகிறார்.

मारीचः सुबाहुः च यागस्य विघ्नं चरतः।
மாரீசனும் சுபாஹுவும் யாகத்திற்கு இடையூறு செய்கிறார்கள்.

दशरथः यागरक्षणाय रामं लक्ष्मणं च यच्छति।
தசரதர் யாகரக்ஷணத்திற்கு ராமனையும் லக்ஷ்மணனையும் தருகிறார்.

रामलक्ष्मणौ विश्वामित्रस्य यागं रक्षतः।
ராம லக்ஷ்மணர்கள் விச்வாமித்திரரின் வேள்வியைக் காக்கின்றனர்.

तौ मिथिलां गच्छतः।
அவர்கள் மிதிலைக்குச் செல்கிறார்கள்.

तत्र रामः शिवधनुः रोपयति।

*அங்கு ராமன் சிவதனுஸை நாணேற்றுகிறார்.*

जनकमहाराजः तुष्यति।

*ஜனக மன்னர் மகிழ்கிறார்.*

सः दशरथं आनयति।

*அவர் தசரதரை வரவழைக்கிறார்.*

दशरथः बन्धुभिः सह मिथिलां आगच्छति।

*தசரதர் பந்துக்களுடன் கூட மிதிலைக்கு வருகிறார்.*

जनकः रामाय सीतां, लक्ष्मणाय ऊर्मिलां च यच्छति।

*ஜனகர் ராமனுக்கு சீதையையும், லக்ஷ்மணனுக்கு ஊர்மிளையையும் தருகிறார்.*

जनकस्य सहोदरः कुशाध्वजः माण्डवीं भरताय श्रुतकीर्तिं शत्रुघ्नाय च यच्छति।

*ஜனகருடைய சகோதரர் குசத்வஜர் மாண்டவியைப் பரதனுக்கும், ச்ருதகீர்த்தியை சத்ருக்னனுக்கும் தருகிறார்.*

दशरथः पुत्रैः वधूभिः च सह अयोध्यां आगच्छति।

*தசரதர் பிள்ளைகளுடனும், நாட்டுப் பெண்களுடனும் அயோத்திக்கு வருகிறார்.*

मार्गे परशुरामः आगच्छति।

*வழியில் பரசுராமர் வருகிறார்.*

रामः परशुरामं युद्धे जयति।

*ராமர் பரசுராமரைப் போரில் வெல்கிறார்.*

सर्वे साकेते सुखं वसन्ति।

*எல்லோரும் அயோத்தியில் சுகமாய் வசிக்கின்றனர்.*

## अनुवादमाला — ९

मातुः भ्राता मातुलः। दुहितुः भर्ता जामाता। सीता ऊर्मिला च स्वसारौ। रामः भरतः लक्ष्मणः शत्रुघ्नश्च भ्रातरः। सीता रामस्य पत्नी। ऊर्मिला लक्ष्मणस्य पत्नी। सीता ऊर्मिला च परस्परं यातरौ च भवतः। मम भाग्यस्य दातारं, भयस्य हन्तारं श्रीरामं नमामि। रामः भ्रात्रा लक्ष्मणेन, जनकस्य दुहित्रा सीतया च सह वनं अगच्छत्। जनकः दुहितरं सीतां रामाय अददात्। रामं जामातरं अकरोत्।

[अगच्छत् - *சென்றார்;* अकरोत् - *செய்து கொண்டார்;* अददात् - *கொடுத்தார்.*]

## अनुवादमाला — १०

वसुदेवस्य दुहिता सुभद्रा। सा कृष्णस्य स्वसा। कृष्णः स्वसारं सुभद्रां अर्जुनाय अददात्। रुक्मिणी ननान्दरि सुभद्रायां अतीव प्रेम प्रकटितवती। वसुदेवः जामात्रे अर्जुनाय पारितोषिकं अयच्छत्। कृष्णस्य माता देवकी। तस्याः भ्राता कंसः। स्वसुः देवक्याः पुत्रे कृष्णे तस्य महान् द्वेषः अभवत्। अन्नस्य दाता पित्रा समः। भयात् त्रातारं पितुः समं वदन्ति। विद्यायाः दातारं श्रीगुरुं नमामि।

[अददात्-अयच्छत् - *கொடுத்தார்;* त्राता - *காப்பாற்றுபவர்;* दाता - *கொடுப்பவர்;* प्रकटितवती - *வெளிப்படுத்தினாள்.*]

## अनुवादमाला — ११

भरतस्य माता कैकेयी। सा भर्तारं दशरथं वरं अयाचत। तेन भरतस्य भ्राता श्रीरामः वनं अगच्छत्। अजः दशरथस्य पिता। दशरथस्य पौत्रौ कुशलवौ, अजस्य नप्तारौ भवतः। मम स्वसुः भर्ता वेङ्कटरामः इदानीं अत्र आगच्छति। मम स्वसुः पुत्राय बालाय

कन्दुकं ददामि। रामः नप्त्रे पारितोषिकं ददाति। मातरं पितरं च प्रातः नमामि। मात्रा सह आपणं गच्छामि। पित्रे आसनं ददामि। पितुः (5 வே) वस्त्रं गृह्णामि। मातुः भ्रातरं मातुलं नमामि। मातरि मे महती भक्तिः ।

[अयाचत - வேண்டினாள்; ददामि - கொடுக்கிறேன்; ददाति - கொடுக்கிறான்; गृह्णामि - எடுத்துக் கொள்கிறேன், பெற்றுக் கொள்கிறேன்.]

## अनुवादमाला — १२

என் தாயுடன் நான் பள்ளிக்கூடம் செல்கிறேன். அவன் தந்தையை வணங்குகிறான். ருக்மிணி நாத்தனாருடன் இங்கு வருகிறாள். ஊர்மிளை சகோதரியைப் பார்க்கிறாள். கம்ஸன் சகோதரியைத் துன்புறுத்துகிறான். ஜனகரின் பெண் ஸீதை. ஊர்மிளை ஸீதையின் சகோதரி.

## अष्टमः पाठः — பாடம் 8

### விசேஷணங்கள் (உரிச்சொற்கள்)

நாம சப்தம், ஸர்வநாம சப்தம், விசேஷண சப்தம் இவை மூன்றும் விபக்திகளை ஏற்கும். रामः हरिः போன்ற பெயர்ச் சொற்களை எட்டு வேற்றுமைகளிலும் கற்றோம். सः तौ ते, सा ते ताः, तत् ते तानि போன்ற சில ஸர்வநாம பதங்களையும் எல்லா வேற்றுமைகளிலும் கற்றோம். ஸர்வநாம பதங்களுக்கு விளிவேற்றுமை இல்லை என்று சொல்லலாம். ஏ! அவனே! ஏ! நானே! ஏ! நீயே! என்றெல்லாம் அழைக்க முடியாதல்லவா! விசேஷணங்கள் பெயர்ச் சொற்களின் விசேஷணங்களை, சிறப்புகளை சிறிய, பெரிய அழகிய என்றெல்லாம் சுட்டிக் காட்டுகின்றன.

ஆகவே, அவை விசேஷணங்கள். இவற்றிற்கு ஸம்ஸ்கிருதத்தில் மூன்று லிங்கங்களும் உண்டு. எட்டு வேற்றுமைகளும் உண்டு. தமிழில் சில சமயம் லிங்க வேறுபாடுகளுடனும், சில சமயம் வேறுபாடின்றியும் வழக்கில் உள்ளன. **உதாரணம்:** கெட்டிக்காரனான பையன், கெட்டிக்காரியான பெண், அழகிய பையன், அழகிய பெண், அழகிய மலர். ஸம்ஸ்கிருதத்தில் விசேஷணங்கள் பெயர்ச் சொற்களுக்கேற்ப லிங்கம், விபக்தி, வசனங்களில் அமையும். சில உதாரணங்களைப் பார்ப்போம்.

शीतल - குளிர்ந்த; उष्ण - சூடான; मधुर - இனிமையான; இவை

| புல்லிங்கத்தில் | ஸ்திரீலிங்கத்தில் | நபும்சகலிங்கத்தில் |
|---|---|---|
| चन्द्रः शीतलः | रात्रिः शीतला | हिमं शीतलं |
| सूर्यः उष्णः | ज्वाला उष्णा | अन्नं उष्णं |
| इक्षुरसः मधुरः | द्राक्षा मधुरा | गानं मधुरं |

शीतल முதலிய சொற்கள் முறையே மூன்று லிங்கங்களிலும் शीतलः शीतला शीतलं என்று மாறுபடுகின்றன. இவ்வாறு எட்டு வேற்றுமைகளிலும் மூன்று எண்களிலும் வேறுபடும்.

**கீழே சில விசேஷணங்களின் பட்டியலைக் கவனிப்போம்.**

| | | பும் | ஸ்திரீ | நபும் |
|---|---|---|---|---|
| शीतल | குளிர்ந்த | शीतलः | शीतला | शीतलं |
| उष्ण | சூடான | उष्णः | उष्णा | उष्णं |
| शुभ्र | வெள்ளையான | शुभ्रः | शुभ्रा | शुभ्रं |
| रक्त | சிவந்த | रक्तः | रक्ता | रक्तं |
| कृष्ण | கருத்த | कृष्णः | कृष्णा | कृष्णं |
| नील | நீலமான | नीलः | नीला | नीलं |
| पीत | மஞ்சளான | पीतः | पीता | पीतं |

| | | | | |
|---|---|---|---|---|
| हरित | பச்சையான | हरितः | हरिता | हरितं |
| सूक्ष्म | நுண்ணிய | सूक्ष्मः | सूक्ष्मा | सूक्ष्मं |
| स्थूल | பருத்த | स्थूलः | स्थूला | स्थूलं |
| कृश | இளைத்த | कृशः | कृशा | कृशं |
| वृद्ध | முதிர்ந்த | वृद्धः | वृद्धा | वृद्धं |
| बाला | இளைய | बालः | बाला | बालं |
| आढ्य | செல்வம் நிறைந்த | आढ्यः | आढ्या | आढ्यं |
| धनिक | செல்வம் நிறைந்த | धनिकः | धनिका | धनिकं |
| दरिद्र | ஏழையான | दरिद्रः | दरिद्रा | दरिद्रं |
| निपुण | திறமை மிக்க | निपुणः | निपुणा | निपुणं |
| शूर | வீரமுள்ள | शूरः | शूरा | शूरं |
| चतुर | திறமையுள்ள | चतुरः | चतुरा | चतुरं |
| पुराण | புதிய | पुराणः | पुराणी | पुराणं |
| नवीन | புதிய | नवीनः | नवीना | नवीनं |
| नव | புதிய | नवः | नवा | नवं |
| मूक | ஊமையான | मूकः | मूका | मूकं |
| पंगु | நொண்டியான | पंगुः | पंगुः | पंगु |
| बधिर | செவிடான | बधिरः | बधिरा | बधिरं |
| काण | ஒரு கண் குருடான | काणः | काणा | काणं |
| अन्ध | இரு கண் குருடான | अन्धः | अन्धा | अन्धं |
| विग्र | மூக்கில்லாத | विग्रः | विग्रा | विग्रं |
| परुष | காதுக்கினியதல்லாத | परुषः | परुषा | परुषं |
| मधुर | காதுக்கினிய | मधुरः | मधुरा | मधुरं |

| | | | | |
|---|---|---|---|---|
| मृदु | மென்மையான | मृदुः | मृदुः | मृदु |
| मृदुल | மென்மையான | मृदुलः | मृदुला | मृदुलं |
| हिंस्र | இம்சிக்கின்ற | हिंस्रः | हिंस्रा | हिंस्रं |
| सिकतिल | மணற்பாங்கான | सिकतिलः | सिकतिला | सिकतिलं |
| कठिन | கடினமான | कठिनः | कठिना | कठिनं |
| सुरभि | மணமுள்ள | सुरभिः | सुरभिः | सुरभि |
| दयालु | இரக்கமுள்ள | दयालुः | दयालुः | दयालु |
| शान्त | அமைதியுள்ள | शान्तः | शान्ता | शान्तं |
| पूति | துர்கந்தமுள்ள | पूतिः | पूतिः | पूति |
| पूर्ण | நிரம்பிய | पूर्णः | पूर्णा | पूर्णं |
| रिक्त | காலியான | रिक्तः | रिक्ता | रिक्तं |
| अल्प | கொஞ்சமான | अल्पः | अल्पा | अल्पं |
| अधिक | அதிகமான | अधिकः | अधिका | अधिकं |
| विरल | குறைவான | विरलः | विरला | विरलं |

*கவனிக்கவும்:*

*1. விசேஷணச் சொற்கள் அடிப்படையில்* अ *என்ற எழுத்தில்தான் முடியும் என்பதில்லை.* इ, उ *முதலிய உயிர் எழுத்துக்களிலும் மெய் எழுத்திலும்கூட முடிந்த விசேஷணச் சொற்கள் உண்டு.*

*2. அகாரத்தில் முடிந்த விசேஷணங்கள் ஸ்திரீ-லிங்கத்தில்* आ *என்று மாறும். சில இடங்களில்* ई (सुन्दरी) *என்று மாறும்.*

*3. விசேஷணங்கள் தாம் சுட்டிக் காட்டும் பெயர்ச்சொற்களின் லிங்கம் வேற்றுமை எண்களுக்குத்*

தக்கபடி மாறும். எனவே, 3 லிங்கங்கள் x 8 வேற்றுமைகள் x 3 எண்களில் ஒரு விசேஷணச் சொல் 72 வகையாக மாறும்.

निपुणः बालः என்ற உதாரணத்தை எடுத்துக் கொண்டால் निपुणः बालः, निपुणौ बालौ, निपुणान् बालान् என்றவாறு 8 வேற்றுமைகளிலும், புல்லிங்கத்தில் 8 x 3 = 24 விதமாய் மாறும். निपुणा कन्या, निपुणे कन्ये, निपुणाः कन्याः, निपुणां कन्यां, निपुणे कन्ये, निपुणाः कन्याः என்று ஸ்திரீலிங்கத்தில் 24 விதமாய் மாறும். ஆனால், விசேஷணச் சொற்களின் மேலுள்ள வேற்றுமை உருபுகள் எந்தப் பொருளையும் தருவதில்லை. அவை அலங்காரமே (Dummy). ஸம்ஸ்கிருதத்தில் விசேஷணச் சொற்களை வேற்றுமை உருபு சேர்த்துத்தான் உபயோகிக்க வேண்டும்.

| | |
|---|---|
| उन्नतः गिरिः | உயரமான மலை |
| अगाधः समुद्रः | ஆழமான கடல் |
| प्रसिद्धाः भूपतयः | புகழ்பெற்ற அரசர்கள் |

नगरेषु धनिकाः जनाः वसन्ति।

நகரங்களில் பணக்காரர்களான ஜனங்கள் வசிக்கிறார்கள்.

अहं उन्नतं गिरिं पश्यामि।

நான் உயரமான மலையைப் பார்க்கிறேன்.

आदिकविना वाल्मीकिना रामायणं कृतम्।

ஆதிகவியான வால்மீகியினால் இராமாயணம் இயற்றப்பட்டது.

अनुजेन लक्ष्मणेन सह रामः वनं गच्छति।

தம்பியான லக்ஷ்மணனுடன் ராமன் காடு செல்கிறான்.

सीता अपि भर्तारं रामं अनुगच्छति।
ஸீதையும் கணவனான ராமனைப் பின்பற்றிச் செல்கிறாள்.

वृद्धाः नराः मन्दं मन्दं गच्छन्ति।
வயது முதிர்ந்த மனிதர்கள் மெல்ல மெல்லச் செல்கிறார்கள்.

उन्नतात् पर्वतात् नदी प्रवहति।
உயரமான மலையிலிருந்து ஆறு பெருகுகிறது.

एकलव्यः गुरोः द्रोणस्य प्रतिमां करोति।
ஏகலவ்யன் குருவான துரோணருடைய பதுமையைச் செய்கிறான்.

कृष्णः भक्तायाः द्रौपद्याः मानं रक्षति।
கிருஷ்ணன் பக்தையான துரௌபதியின் மானத்தைக் காக்கிறார்.

भृङ्गाः रम्येभ्यः पुष्पेभ्यः मधु पिबन्ति।
வண்டுகள் அழகிய பூக்களிலிருந்து தேனைக் குடிக்கின்றன.

जीर्णेषु वृक्षेषु विहगाः न वसन्ति।
பட்டுப் போன மரங்களில் பறவைகள் வசிப்பதில்லை.

सर्कारः दरिद्रेभ्यः माणवकेभ्यः उपकारधनं यच्छति।
அரசாங்கம் ஏழைகளான மாணவர்களுக்கு உதவிப்பணம் தருகிறது.

பயிற்சி:

1. கீழே சில விசேஷண விசேஷ்யங்கள் தரப்படுகின்றன. அவற்றில் ஒரு சொல்லில் விபக்தி அமைக்கப்படவில்லை. அதை அமைத்துப் பொருளும் எழுதவும்.

दयालु — पुरुषेण। रक्त — पुष्पे। उष्णेन उदक —। निपुण — कन्यका। सुरभि — वायुना। पुराण — आलयानां।

स्थूल — फलानि। मृदु — शयने। पंगु — नरौ। पीतानि पुष्प —। उष्ण — ज्वालाभिः। कठिन — शिलायाम्।

2. *கீழே சில விசேஷண விசேஷ்யங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றில் விபக்தி வசனங்களின் ஒற்றுமை (agreement) இல்லை. திருத்திப் பொருள் எழுதவும்.*

चतुरः बालकाः। निपुणः कन्यका। उष्णः जलं। शीतला हिमं। उन्नता गिरिः। सुरभि पुष्पाणि। अन्धाय मनुष्यस्य। मृदुः शयने। क्रूरं मृगान्। दीनेषु जने।

3. *ஸம்ஸ்கிருதத்தில் எழுதுக:*

*கொஞ்சமான தண்ணீர்.*

*அதிகமான பால்.*

*காலியான பாத்திரம்*

*இனிமையான பாட்டு.*

## अनुवादमाला — १३

दयालुः गुरुः छात्रं बोधयति। अन्धः नरः भिक्षां याचते। अश्वः सिकतिलायां भूमौ तिष्ठति। कठिनायां शिलायां वयं उपविशामः। रामः मधुरं वचः भाषते। तटाके मधुरं पानीयं अस्ति। दरिद्रस्य हस्तः रिक्तः भवति। आढ्यस्य हस्तः धनेन पूर्णः भवति। ज्ञानिनः विरलाः भवन्ति। अयं आश्रमः शान्तः भवति।

[छात्रः - *மாணவன்;* याचते - *வேண்டுகிறான்;* उपविशामः - *உட்காருகிறோம்;* भाषते - *பேசுகிறான்.*]

## अनुवादमाला — १४

भारते हिमालयः उन्नतः गिरिः। तस्मात् उन्नतात् हिमालयात् गङ्गा प्रवहति। गङ्गायाः जलं मधुरं शीतं च भवति। गङ्गायाः प्रवाहः पूर्णः भवति। सुरभिणा पुष्पेण ईश्वरं अर्चयति। अयं याचकः शान्तात् धनिकात् अधिकं धनं याचते। बालाः माणवकाः रम्याणि पारितोषिकाणि लभन्ते। अगाधे समुद्रे प्रसिद्धाः मुक्ताः विद्यन्ते।

[**प्रवहति** - *பெருகுகிறது;* **प्रवाहः** - *நீர்ப்பெருக்கு;* **पारितोषिकाणि** - *பரிசுப் பொருள்கள்;* **लभन्ते** - *பெறுகிறார்கள்;* **मुक्ताः** - *முத்துக்கள்.*]

## पञ्चमः पाठः — பாடம் 5

(**संख्या** — *எண்கள் 1 முதல் 10 வரை*)

| பும்லிங்கம் | | ஸ்திரீ-லிங்கம் | | நபும்ஸக-லிங்கம் | |
|---|---|---|---|---|---|
| एकः | ஒருவன் | एका | ஒருவள் | एकं | ஒன்று |
| द्वौ | இருவர் | द्वे | இருவர் | द्वे | இரண்டு |
| त्रयः | மூவர் | तिस्रः | மூவர் | त्रीणि | மூன்று |
| चत्वारः | நால்வர் | चतस्रः | நால்வர் | चत्वारि | நான்கு |
| पञ्च | ஐவர் | पञ्च | ஐவர் | पञ्च | ஐந்து |
| षट् | அறுவர் | षट् | அறுவர் | षट् | ஆறு |
| सप्त | ஏழு | सप्त | ஏழு | सप्त | ஏழு |
| अष्ट | எட்டு | अष्ट | எட்டு | अष्ट | எட்டு |
| नव | ஒன்பது | नव | ஒன்பது | नव | ஒன்பது |
| दश | பத்து | दश | பத்து | दश | பத்து |

*குறிப்பு:* 1. एक द्वि त्रि चतुर् *என்ற 4 பகுதிகளும் 3 லிங்கங்களிலும் வேறுபடுகின்றன. மற்றவை மாறவில்லை.* 2. एक *சப்தத்திற்கு 3 லிங்கத்திலும் 7 வேற்றுமைகளிலும் ஒருமை மட்டுமே உண்டு.* 3. द्वि *சப்தத்திற்கு இருமை மட்டுமே உண்டு.* 4. त्रि *முதல் பன்மை மட்டுமே உண்டு. முழு சப்த ரூபங்கள் பாடத்தின் இறுதியில் தரப்பட்டுள்ளன.*

1. अयं एकः बालः = *அவன் ஒரு சிறு பையன்*
   इयं एका बाला = *இவள் ஒரு சிறு பெண்*
   इदं एकं पुष्पम् = *இது ஒரு பூ.*

2. अयं एकः बालः + अयं एकः बालः = इमौ द्वौ बालौ
   इयं एका बाला + इयं एका बाला = इमे द्वे बाले
   इदं एकं पुष्पं + इदं एकं पुष्पं = इमे द्वे पुष्पे

3. अयं एकः बालः + अयं एकः बालः +
      अयं एकः बालः = इमे त्रयः बालाः
   इयं एका बाला + इयं एका बाला +
      इयं एका बाला = इमाः तिस्रः बालाः
   इदं एकं पात्रं + इदं एकं पात्रं +
      इदं एकं पात्रं = इमानि त्रीणि पात्राणि

*இதுபோல் மற்ற எண்களையும் அமைக்கலாம்.*

*பயிற்சி: கோடிட்ட இடங்களை நிரப்புக:*

*உதாரணம்:* रामः कृष्णः इति वसुदेवस्य ______ पुत्रौ

(द्वौ *என்பது விடை*)

कुन्ती माद्री इति पांडोः ______ भार्ये

कुंभकर्णः विभीषणः इति रावणस्य ______ भ्रातरौ

दशरथस्य रामः लक्ष्मणः भरतः शत्रुघ्नः इति ______ पुत्राः

धर्मपुत्रादयः *(தர்மர் முதலானோர்)* ______ भ्रातरः

वर्षस्य ______ ऋतवः

(ऋतुः *பருவம், இரண்டு மாதம் கொண்ட காலம்*)

सूर्यादयः ______ ग्रहाः

सुब्रह्मण्यस्य ______ मुखानि

परमेश्वरस्य ______ नेत्राणि

एक *முதலிய சொற்களின் சப்த ரூபங்கள்*

एकः *முதல்* चतुर् *வரை மூன்று லிங்கங்களிலும் ரூபங்கள் மாறுபடுகின்றன.*

| पुंलिङ्ग | स्त्रीलिङ्ग | नपुंसकलिङ्ग |
|---|---|---|
| | एक — *ஏகவசனம் மட்டும்* | |
| एकः | एका | एकं |
| एकं | एकां | एकं |
| एकेन | एकया | एकेन |
| एकस्मै | एकस्यै | एकस्मै |
| एकस्मात् | एकस्याः | एकस्मात् |
| एकस्य | एकस्याः | एकस्य |
| एकस्मिन् | एकस्यां | एकस्मिन् |
| | द्वि — *த்விவசனம் மட்டும்* | |
| द्वौ | द्वे | द्वे |
| द्वौ | द्वे | द्वे |

| | | |
|---|---|---|
| द्वाभ्यां | द्वाभ्यां | द्वाभ्यां |
| द्वाभ्यां | द्वाभ्यां | द्वाभ्यां |
| द्वाभ्यां | द्वाभ्यां | द्वाभ्यां |
| द्वयोः | द्वयोः | द्वयोः |
| द्वयोः | द्वयोः | द्वयोः |

त्रि — பஹு⁻வசனம் மட்டும்

| | | |
|---|---|---|
| त्रयः | तिस्रः | त्रीणि |
| त्रीन् | तिस्रः | त्रीणि |
| त्रिभिः | तिसृभिः | त्रिभिः |
| त्रिभ्यः | तिसृभ्यः | त्रिभ्यः |
| त्रिभ्यः | तिसृभ्यः | त्रिभ्यः |
| त्रयाणां | तिसृणां | त्रयाणां |
| त्रिषु | तिसृषु | त्रिषु |

चतुर् — பஹு⁻வசனம் மட்டும்

| | | |
|---|---|---|
| चत्वारः | चतस्रः | चत्वारि |
| चतुरः | चतस्रः | चत्वारि |
| चतुर्भिः | चतसृभिः | चतुर्भिः |
| चतुर्भ्यः | चतसृभ्यः | चतुर्भ्यः |
| चतुर्भ्यः | चतसृभ्यः | चतुर्भ्यः |
| चतुर्णां | चतसृणां | चतुर्णां |
| चतुर्षु | चतसृषु | चतुर्षु |

*இனி வரும் ஆறு சொற்களிலும், மூன்று லிங்கங்களிலும் வேறுபாடில்லை. பஹு⁻வசனம் மட்டும்.*

| | | |
|---|---|---|
| पञ्च | षट् | सप्त |
| पञ्च | षट् | सप्त |
| पञ्चभिः | षड्भिः | सप्तभिः |

| | | |
|---|---|---|
| पञ्चभ्यः | षड्भ्यः | सप्तभ्यः |
| पञ्चभ्यः | षड्भ्यः | सप्तभ्यः |
| पञ्चानां | षण्णां | सप्तानां |
| पञ्चसु | षट्सु | सप्तसु |

| | | |
|---|---|---|
| अष्ट | नव | दश |
| अष्ट | नव | दश |
| अष्टभिः | नवभिः | दशभिः |
| अष्टभ्यः | नवभ्यः | दशभ्यः |
| अष्टभ्यः | नवभ्यः | दशभ्यः |
| अष्टानां | नवानां | दशानां |
| अष्टसु | नवसु | दशसु |

*குறிப்பு:* अष्टौ अष्टौ अष्टाभिः अष्टाभ्यः अष्टाभ्यः अष्टानां अष्टासु *என்று மாற்று ரூபங்களும்* अष्ट *சப்தத்திற்கு உண்டு. இவைகளும் விசேஷணங்களைப் போல் பெயர்ச் சொற்களைச் சிறப்பிக்கின்றன. ஆகவே,*

| | | |
|---|---|---|
| एकः बालः | एका कन्या | एकं पुष्पं |
| एकं बालं | एकां कन्यां | एकं पुष्पं |
| एकेन बालेन | एकया कन्यया | एकेन पुष्पेण |
| एकस्मै बालाय | एकस्यै कन्यायै | एकस्मै पुष्पाय |
| एकस्मात् बालात् | एकस्याः कन्यायाः | एकस्मात् पुष्पात् |
| एकस्य बालस्य | एकस्याः कन्यायाः | एकस्य पुष्पस्य |
| एकस्मिन् बाले | एकस्यां कन्यायां | एकस्मिन् पुष्पे |

என்று, தான் தழுவும் பெயர்ச்சொல்லின் லிங்கம் விபக்திக்கு ஏற்ப மாறி வருகின்றன. இதுபோல் மற்ற பெயர்ச் சொற்களும் வாக்கியங்களில் அமையும்.

दशरथः चतुर्भिः पुत्रैः प्रीतः अभवत्।
*தசரதர் நான்கு பிள்ளைகளால் மகிழ்ந்தவர் ஆனார்.*

अश्वस्य चतुर्षु पादेषु एकैकः शफः एव अस्ति।
*குதிரைக்கு நான்கு கால்களிலும் ஒவ்வொரு குளம்புதான் இருக்கிறது.*

इतरेषां मृगाणां द्वौ शफौ स्तः।
*மற்ற மிருகங்களுக்கு இரண்டு குளம்புகள் உள்ளன.*

वयं द्वाभ्यां नेत्राभ्यां पश्यामः।
*நாம் இரு கண்களால் பார்க்கிறோம்.*

சில விசேஷ எண்கள் — (பன்மையில்தான் வரும்)

| | |
|---|---|
| एकद्व | *ஒன்றல்லது இரண்டு (ஓரிரண்டு)* |
| द्वित्र | *இரண்டல்லது மூன்று (இரண்டு மூன்று)* |
| त्रिचतुर | *மூன்று அல்லது நான்கு (மூன்று நான்கு)* |
| चतुष्पञ्च | *நான்கு அல்லது ஐந்து (நான்கைந்து)* |
| पञ्चष | *ஐந்தல்லது ஆறு (ஐந்தாறு)* |
| षट्सप्त | *ஆறு அல்லது ஏழு (ஆறேழு)* |
| सप्ताष्ट | *ஏழு அல்லது எட்டு (ஏழெட்டு)* |

இதற்கு மேலும் சொல்லலாம். பிரசித்தமான பிரயோகங்களை இலக்கியங்களில் காணோம். புல்லிங்கத்தில் ராம சப்தம் போலவும், ஸ்திரீலிங்கத்தில் மாலா சப்தத்தைப் போலவும், நபும்ஸகலிங்கத்தில் வன சப்தத்தைப் போலவும் விபக்தி ரூபங்களைப் பெறுகின்றது.

उद्याने एकद्वाः फलवृक्षाः अपि सन्ति।
தோட்டத்தில் ஓரிரண்டு பழ மரங்களும் உள்ளன.

(ஒன்றோ அல்லது இரண்டோ நிச்சயமாகத் தெரியவில்லை. அல்லது அவ்விதம் திட்டமாகக் குறிப்பிட அவசியமில்லை என்று பொருள்.)

| पुं | स्त्री | नपुं |
|---|---|---|
| एकद्वाः | एकद्वाः | एकद्वानि |
| द्वित्राः | द्वित्राः | द्वित्राणि |
| त्रिचतुराः | त्रिचतुराः | त्रिचतुराणि |
| चतुष्पञ्चाः | चतुष्पञ्चाः | चतुष्पञ्चानि |
| पञ्चषाः | पञ्चषाः | पञ्चषाणि |
| षट्सप्ताः | षट्सप्ताः | षट्सप्तानि |
| सप्ताष्टाः | सप्ताष्टाः | सप्ताष्टानि |

रथ्यायां एकद्वेषु स्थलेषु सेतोः परिष्कारः प्रचलति।
சாலையில் ஓரிரண்டு இடங்களில் பாலத்தின் சீரமைப்பு நடக்கிறது.

गोण्यां एकद्वानि छिद्राणि सन्ति।
கோணியில் ஓரிரண்டு ஓட்டைகள் உள்ளன.

गृहे द्वित्राः अतिथयः आगताः।
வீட்டில் இரண்டு மூன்று விருந்தினர் வந்தார்கள்.

पुस्तके पञ्चषाणि पुटानि त्रुटितानि।
*புத்தகத்தில் ஐந்தாறு பக்கங்கள் கிழிந்துள்ளன.*

त्रिचतुरेभ्यः दिनेभ्यः पूर्वं अहं सुन्दरेशं अपश्यम्।
*3-4 நாட்களுக்கு முன் நான் சுந்தரேசனைப் பார்த்தேன்.*

चतुष्पञ्चैः वयस्यैः सह गोपालः मैदानं आगच्छत्।
*4-5 நண்பர்களுடன் கோபாலன் மைதானம் சென்றான்.*

पिटके एकद्वानि फलानि शीर्णानि।
*கூடையில் ஓரிண்டு பழங்கள் நலிந்து விட்டன.*

परीक्षायां पञ्चषाणां प्रश्नानां उत्तराणि न अलिखम्।
*பரீக்ஷையில் 5-6 கேள்விகளுக்கு விடைகள் எழுதவில்லை.*

गायकः दीक्षितस्य त्रिचतुराणि कीर्तनानि अगायत्।
*பாடகர் தீக்ஷிதரின் 3-4 கீர்த்தனங்களைப் பாடினார்.*

कार्यालये वयं सप्ताष्टाः कार्यदर्शिनः स्मः।
*ஆபீஸில் நாங்கள் 7-8 அலுவலர்கள் இருக்கிறோம்.*

क्षेत्रे पञ्चषाः धेनवः तृणं चरन्ति।
*வயலில் ஐந்தாறு பசுக்கள் புல்லை மேய்கின்றன.*

## दशमः पाठः — பாடம் 10

## உறவினர்களைக் குறிப்பிடும் சொற்கள்

*தாயார்* माता, जननी, अम्बा    *தந்தை* पिता, जनकः

*சகோதரர்* भ्राता, सोदरः    *சகோதரி* स्वसा, भगिनी

*சகோதரர்களில் மூத்தவரைக் குறிப்பிட வேண்டுமாயின்*
ज्येष्ठः, अग्रजः / ज्येष्ठा, अग्रजा

இளையவரைக் குறிப்பிடுவதானால் कनिष्ठः अनुजः / कनिष्ठा, अनुजा

தந்தையின் தந்தை पितामहः    தந்தையின் தாய் पितामही

தாயின் தந்தை मातामहः    தாயின் தாய் मातामही

மகன்    सुतः, तनयः, आत्मजः, पुत्रः

மகள்    सुता, तनया, आत्मजा, पुत्री

மகளின் பிள்ளை दौहित्रः    மகளின் மகள் दौहित्री

மகனின் பிள்ளை पौत्रः    மகனின் மகள் पौत्री

தோழன் वयस्यः, मित्रं    தோழி वयस्या, मित्रं

[मित्रं என்பது எப்போதும் நபும்ஸகலிங்கத்திலேயே வரும். मित्रः என்ற புல்லிங்கச் சொல் ஸூர்யனைக் குறிக்கும்.]

## अनुवादमाला — १५

— मित्र राम! नमः ते।

— मित्र कृष्ण! नमः ते। अपि तव कुशलम्?

— मम कुशलं एव। कः त्वया सह आगच्छति?

— मम भ्राता रामचन्द्रः।

— सः किं तव अनुजः, उत अग्रजः?

— मम अनुजः एव। सः मया सहैव पठति।

— अपि तव माता कुशलिनी?

— मम माता कुशलिनी एव।

— किं ते स्वसा नन्दिनी भर्तुः गृहात् आगता?

— मे स्वसा न आगता। तस्याः सुताः विद्याशालायां पठन्ति।

तेषां विरामः न अस्ति। अतः मम स्वसा भर्तुः गृहे एव तिष्ठति।

— तव अग्रजः किं करोति?

— मम अग्रजः कलाशालायां पठति।

— तव जनकः कुत्र वर्तते?

— मम जनकः तञ्जापुरे वर्तते।

— अपि त्वं इदानीं संस्कृतं पठसि?

— अहं संस्कृतं पठामि। मम अग्रजा वसुमती अपि संस्कृतं पठति। संस्कृताध्यापकस्य गृहं गत्वा प्रतिदिनं संस्कृतं पठावः। मम पिता संस्कृतं सम्यक् जानाति। मम पितामहः पितामही च मिथः संस्कृतेनैव भाषेते। अतः मम, मम अग्रजायाः च संस्कृते रुचिः अधिका।

— किं तव माता संस्कृतं न जानाति?

— न न। सा अपि संस्कृतं सम्यक् जानाति।

— एतत् श्रुत्वा अहं अधिकं सन्तोषं अनुभवामि।

[**कुशलं** - *நலம், க்ஷேமம்;* **कुशली** - *நலமுள்ளவர் (ஆண்);* **कुशलिनी** - *நலமுள்ளவள் (பெண்);* **विरामः** - *விடுமுறை;* **संस्कृताध्यापकः** - *ஸம்ஸ்கிருத ஆசிரியர்;* **भाषेते** - *(இருவர்) பேசுகிறார்கள்;* **मिथः** - *ஒருவருக்கொருவர்.*]

[**नमः ते** *என்பதைச் சேர்த்து* **नमस्ते** *என்பர்.*]

*இதனைத் தமிழில் மொழிபெயர்க்கவும்.*

## एकादशः पाठः — பாடம் 11

எண்ணிக்கைச் சொற்களுடன் **वारं कृत्वः** என்ற விகுதிகளைச் சேர்த்கால் தடவை என்று பொருள்படும். உதாரணம்:

| | | | |
|---|---|---|---|
| एक | एकवारं | एककृत्वः | ஒரு தடவை |
| द्वि | द्विवारं | द्विकृत्वः | இரு தடவை |
| त्रि | त्रिवारं | त्रिकृत्वः | மூன்று தடவை |
| चतुः | चतुर्वारं | चतुष्कृत्वः | நான்கு தடவை |
| पञ्च | पञ्चवारं | पञ्चकृत्वः | ஐந்து தடவை |
| षट् | षड्वारं | षट्कृत्वः | ஆறு தடவை |
| सप्त | सप्तवारं | सप्तकृत्वः | ஏழு தடவை |
| अष्ट | अष्टवारं | अष्टकृत्वः | எட்டு தடவை |
| नव | नववारं | नवकृत्वः | ஒன்பது தடவை |
| दश | दशवारं | दशकृत्वः | பத்து தடவை |

**குறிப்பு:** **सकृत्** என்ற சொல் **एकवारं** ஒரு தடவை என்ற பொருளைத் தரும். அதற்கு எதிர்ப்பதம் **असकृत्** பல தடவை என்று பொருள் தரும்.

**'धा'** என்ற விகுதியைச் சேர்த்தால் வகையாக என்று பொருள்படும். உதாரணம்.

| | | | |
|---|---|---|---|
| एकधा | ஒரு வகையாக | षोढा | ஆறு வகையாக |
| द्विधा | இரண்டு வகையாக | सप्तधा | ஏழு வகையாக |
| त्रिधा | மூன்று வகையாக | अष्टधा | எட்டு வகையாக |
| चतुर्धा | நான்கு வகையாக | नवधा | ஒன்பது வகையாக |
| पञ्चधा | ஐந்து வகையாக | दशधा | பத்து வகையாக |

षट् + धा என்பது षोढा என்று மாறிவிட்டது.

'शः' என்ற விகுதியைச் சேர்த்தால் ஒவ்வொன்றாக, இரண்டு இரண்டாக என்பதுபோல் பொருள்படும்.

| | | | |
|---|---|---|---|
| एकशः | ஒவ்வொன்றாக | षट्छः | ஆறு ஆறாக |
| द्विशः | இரண்டிரண்டாக | सप्तशः | ஏழு ஏழாக |
| त्रिशः | மும்மூன்றாக | अष्टशः | எட்டு எட்டாக |
| चतुश्शः | நான்குநான்காக | नवशः | ஒன்பது ஒன்பதாக |
| पञ्चशः | ஐந்து ஐந்தாக | दशशः | பத்து பத்தாக |

वारं, कृत्वा, धा, शः என்ற விகுதி சேர்ந்தவை எல்லாம் அவ்யயங்கள்.

प्रतिदिनं एकवारमपि / एककृत्वः अपि / सकृदपि भगवन्नाम कीर्तय।
தினமும் ஒரு தடவையாவது இறைவனின் நாமம் சொல்லு.

मूर्खः असकृत् उक्तं अपि हितं न मानयति।
மூர்க்கன் பலதடவை சொல்லப்பட்டாலும் நல்லுரையை மதிப்பதில்லை.

प्रातः सायं च द्विवारं नलिके जलं आगच्छति।
காலையிலும் மாலையிலும் இரு தடவை குழாயில் ஜலம் வருகிறது.

सः विनायकं त्रिवारं / त्रिकृत्वः प्रदक्षिणं करोति।
அவன் விநாயகரை மூன்றுமுறை வலம் வருகிறான்.

अहं प्रतिदिनं चतुर्वारं वटीं गिलामि।
நான் தினமும் 4 தடவை மாத்திரையை விழுங்குகிறேன்.

केषुचित् देवालयेषु षट्कृत्वः / षड्वारं पूजा चलति।
*சில கோயில்களில் 6 தடவை வழிபாடு நடக்கிறது.*

अर्चकः नारिकेलं द्विधा कृत्वा निवेदयति।
*அர்ச்சகர் தேங்காயை இரு துண்டாக்கி நிவேதனம் செய்கிறார்.*

पिता इक्षुदण्डं त्रिधा कृत्वा पुत्रेभ्यः यच्छति।
*தந்தை கரும்பை மூன்று துண்டாக்கி பிள்ளைகளுக்குக் கொடுக்கிறார்.*

भूमौ पतितं भाण्डं शतधा अभवत्।
*தரையில் விழுந்த பானை நூறாக ஆயிற்று.*

अहं रूप्यकाणि एकशः गणयामि।
*நான் ரூபாய்களை ஒவ்வொன்றாக எண்ணுகிறேன்.*

आचार्यः बालकान् त्रिशः स्थापयति।
*ஆசிரியர் மாணவர்களை மும்மூவராக நிறுத்தி வைக்கிறார்.*

त्वं बालकेभ्यः फलानि पञ्चशः विभज्य देहि।
*நீ சிறுவர்களுக்குப் பழங்களை ஐந்து ஐந்தாகப் பிரித்துக் கொடு.*

*பயிற்சிகள்: கொடுக்கப்பட்ட எண்களுக்கு ஸம்ஸ்கிருத பதம் அமைத்து வாக்கியங்களைப் பூர்த்தி செய்து எழுதவும்.*

प्राणिशालायां अजगराः सन्ति।
*மிருகக்காட்சிசாலையில் 3-4 பாம்புகள் உள்ளன.*

पुस्तकालये नवीनपुस्तकानि आगतानि।
*நூல்நிலையத்தில் 7-8 புதுப்புத்தகங்கள் வந்தன.*

प्रतिदिनं आमलकफलानि भक्षय।

*தினமும் 1-2 நெல்லிக்கனிகளைச் சாப்பிடு.*

सायं बालकैः सह उद्याने क्रीड।

*மாலையில் 2-3 சிறுவர்களுடன் தோட்டத்தில் விளையாடு.*

गुरुः बालकेभ्यः वेदं उपदिशति।

*ஆசிரியர் 5-6 சிறுவர்களுக்கு வேதம் கற்பிக்கிறார்.*

त्रिशिरःपुरे कलाशालाः सन्ति।

*திருச்சியில் 7-8 கல்லூரிகள் உள்ளன.*

तासु कलाशालासु बालिकाः एव पठन्ति।

*அவற்றில் 2-3 கல்லூரிகளில் பெண்களே படிக்கிறார்கள்.*

***ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கவும்.***

*துர்க்கையை ஒரு தடவை வலம் வா.*

*விநாயகரை மூன்று தடவை வலம் வா.*

*பழங்களை நான்காகக் கொண்டு வா.*

*மைதானத்தில் சிறுவர்கள் ஐந்து ஐந்தாக நிற்கின்றார்கள்.*

## द्वादशः पाठः — பாடம் 12

### अव्ययानि — Indeclinables

नाम आख्यातं निपातः उपसर्गः *என்று சொற்களை நான்கு வகைகளாக ஸம்ஸ்க்ருத இலக்கணம் வகுத்தது. அவற்றில்* **नाम** *(பெயர்ச் சொற்கள்)* **आख्यातं** *(வினைச் சொற்கள்) என்பவற்றைப் பற்றி இதுவரை கொஞ்சம் கற்றோம். அவை லிங்கம், விபக்தி, வசனம், காலம் முதலியவற்றால் வேறுபடுகின்றன. எனவே, அவைகளை மாறுபடுபவை*

व्ययங்கள் என்று சொல்லலாம். निपातः उपसर्गः என்பவை अव्ययங்கள் மாறாதவை. ஆங்கில இலக்கணப்படி Prepositions, Adverbs, Conjunctions, Interjections என்பவை இவற்றில் அடங்கும். (பாடமாலா 1ல் பாடம் 10)

அவ்யயங்களில் சில முக்கியமான கிரியா விசேஷணங்கள் — வினை உரிச் சொற்கள் கீழே தரப்படுகின்றன.

| | |
|---|---|
| अथ | பிறகு |
| अन्तः | உள்ளே |
| अधः, अधस्तात् | கீழே |
| अलं | போதும் |
| इव | போல் |
| ईषत् | கொஞ்சம் |
| एवं | இப்படி |
| कृतं | போதும் |
| किल | அல்லவா |
| खलु | அல்லவா |
| चिरं | நீண்ட நேரமாய், வெகு நாட்களாக |
| जातु | ஒரு சமயம் |
| प्राक् | முன்னால் (நேரத்தால்) |
| पुरः | முன்னால் (இடத்தால்) |
| पुरतः | முன்னால் (இடம்) |
| पुरस्तात् | முன்னால் (இடம்) |

| | |
|---|---|
| पश्चात् | பின்னால் (நேரம், இடம்) |
| बहिः | வெளியே |
| मिथः | ஒன்றுக்கொன்று |
| मा | வேண்டாம் |
| तूष्णीं | மௌனமாக |
| दिष्ट्या | நல்லவேளையாக |
| पुरा | முற்காலத்தில் |
| सद्यः | உடனே |
| ह्यः | நேற்று |
| श्वः | நாளை |

आलयस्य पुरः / पुरतः / पुरस्तात् पुष्करिणी अस्ति।
கோயிலுக்கு முன்னால் திருக்குளம் உள்ளது.

अद्य सोमवारः।
இன்று திங்கட்கிழமை.

ह्यः भानुवारः।
நேற்று ஞாயிற்றுக்கிழமை.

श्वः भौमवारः।
நாளை செவ்வாய்க்கிழமை.

विद्यालयस्य पश्चात् नदी प्रवहति।
பள்ளிக்குப் பின்னால் ஆறு ஓடுகிறது.

अहं प्रतिदिनं प्रायः वेलातटं गच्छामि।
நான் தினமும் பெரும்பாலும் கடற்கரைக்குச் செல்கிறேன்.

त्वं सूर्योदयात् प्राक् शयनात् उत्तिष्ठ।

*நீ சூர்யோதயத்திற்கு முன் படுக்கையைவிட்டு எழுந்திரு.*

पुनः सायङ्काले मम गृहं मा आगच्छ।

*மீண்டும் மாலையில் என் வீட்டிற்கு வராதே.*

पुनः पुनः एवं निर्बन्धं मा कुरु।

*மீண்டும் மீண்டும் இவ்வாறு நிர்ப்பந்தம் செய்யாதே.*

अथ जातु दशरथः मृगयायै वनं आगच्छत्।

*பிறகு ஒரு சமயம் தசரதர் வேட்டைக்குப் போனார்.*

गर्भगृहस्य अन्तः देवमूर्तिः अस्ति।

*கர்ப்பகிருஹத்துக்கு உள்ளே இறைவனின் உருவம் உள்ளது.*

वृक्षस्य अधः / अधस्तात् छायायां पान्थाः उपविशन्ति।

*மரத்தின் கீழே நிழலில் வழிப்போக்கர்கள் உட்காருகிறார்கள்.*

अलं / कृतं भयेन। अहं युष्मान् रक्षामि।

*பயம் போதும் (பயம் தேவையில்லை). நான் உங்களைக் காப்பாற்றுகிறேன்.*

रामः वनं गच्छतु, भरतः राजा भवतु इति कैकेयी वरं अपृच्छत्।

*ராமன் காட்டிற்குச் செல்லட்டும். பரதன் ராஜாவாக ஆகட்டும் என்று கைகேயி வரம் கேட்டாள்.*

सीतां अन्वेष्टुं रामलक्ष्मणौ चिरं वने अचरताम्।

ஸீதையைத் தேட ராமலக்ஷ்மணர்கள் நெடுநேரம் காட்டில் அலைந்தனர்.

पितुः कोपः ईषत् शान्तः आसीत्।

தந்தையின் கோபம் கொஞ்சம் குறைந்து இருந்தது.

अधुना मेघो न वर्षति। त्वं गृहं गच्छ।

இப்பொழுது மேகம் மழை பொழியவில்லை. நீ வீடு செல்.

नक्षत्राणि रत्नदीपाः इव विलसन्ति।

விண்மீன்கள் இரத்தின விளக்குகள்போல் விளங்குகின்றன.

**ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கவும்:**

இன்று மாலை நான் வருகிறேன்.

இப்பொழுது நீ என்ன செய்கிறாய்?

தேங்காயின் உள்ளே இளநீர் இருக்கிறது.

கொஞ்சம் உரக்கப் படி.

இப்படிச் செய்யாதே.

அவர்கள் நெடுநேரமாக இங்கு நிற்கிறார்கள்.

பள்ளிக்கு முன்னால் மைதானம் இருக்கிறது.

மக்கள் கோயிலிலிருந்து வெளியே வருகிறார்கள்.

அவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிடுகிறார்கள்.

வகுப்பில் மௌனமாக இரு. பேசாதே.

வண்டி மெல்ல வருகிறது.

நேற்றும் இன்றும் பள்ளிக்கு விடுமுறை.

வேலையை நன்றாகச் செய்.

மீண்டும் நாளைக்கு வா.

பரிகாசம் போதும்.

[नारिकेलोदकं - இளநீர்; मा संलप - பேசாதே; विरामः - விடுமுறை.]

போதும் (இனி வேண்டாம்) என்ற பொருளில் अलं कृतं என்று இரண்டு அவ்யயச் சொற்கள் தரப்பட்டுள்ளன. தவிர்க்கப்பட விரும்பும் பொருளைக் குறிப்பிடும் சொல்லை மூன்றாம் வேற்றுமையில் உபயோகப்படுத்த வேண்டும் என்பது இலக்கண விதி. कलहः निद्रा भयं என்ற பும்லிங்க, ஸ்திரீலிங்க நபும்ஸகலிங்கச் சொற்கள் अलं कृतं என்ற அவ்யயங்களுடன் சேரும்போது अलं कलहेन—अलं निद्रया—अलं भयेन என்ற மூன்றாம் வேற்றுமையில் உபயோகிக்கப் பெறும்.

## अनुवादमाला — १६

तिसृभिः होराभिः एको यामः। दिवसस्य चत्वारः यामाः। निशायाः चत्वारः यामाः। आहत्य एकस्य दिनस्य अष्टौ यामाः। पञ्चदशभिः दिनैः एकः पक्षः। सः कृष्णपक्षः शुक्लपक्षः इति द्वेधा भवति। कृष्णपक्षस्य अन्तिमं दिनं अमावास्या। शुक्लपक्षस्य अन्तिमं दिनं पूर्णिमा। द्वाभ्यां पक्षाभ्यां एको मासः। द्वाभ्यां मासाभ्यां एकः ऋतुः। षड्भिः ऋतुभिः एकः सम्वत्सरः।

[होरा - மணி; यामः - யாமம்; दिवसः - பகல்; निशा

- இரவு; आहत्य - ஆகக்கூடி; दिनं - நாள்; अन्तिमं - கடைசி.]

## अनुवादमाला — १७

अयं छात्रेषु प्रथमः। छात्राः द्वितीयायां तिथौ कलाशालां आगच्छन्ति। अर्जुनः पाण्डोः तृतीयः पुत्रः। चतुर्थ्यां तिथौ विनायकं पूजयन्ति। भ्रातृषु अहं पञ्चमः। मम द्वितीया भगिनी रुक्मिणी। अहं प्रातः दशम्यां होरायां तत्र आगच्छामि। कृष्णः अष्टम्यां तिथौ जातः। वसुदेवस्य पुत्रेषु अयं अष्टमः। सरस्वतीं कन्यामासस्य नवम्यां तिथौ पूजयन्ति। तस्य दशमी तिथिः विजयदशमी।

[छात्रः - *மாணவன்;* कन्यामासः - *புரட்டாசி மாதம்.*]

## अनुवादमाला — १८

*ராமன் ஒவ்வொரு நாளும் காலையில் இங்கு வருகிறான். இவன் மாணவர்களில் ஏழாவது. ஸஹதேவன் பாண்டுவின் ஐந்தாவது பிள்ளை. நான் வகுப்பில் ஒன்பதாமவன். பலராமன் வஸுதேவரது ஏழாவது பிள்ளை. கைகேயி தசரதரின் மூன்றாவது மனைவி. கிருஷ்ணனுக்கு எட்டு மனைவிகள். ராமனுக்கு ஸீதை ஒரே மனைவி*

[प्रतिदिनं - *ஒவ்வொரு நாளும்.*]

## अनुवादमाला — १९

*வீட்டில் நாங்கள் ஏழு-எட்டு சகோதரர்கள் வசிக்கிறோம். என் வீட்டில் 4-5 பசுமாடுகள் உள்ளன. அவன் விநாயகரை நான்கு தடவை வணங்குகிறான். நான் தினமும் இரண்டு முறை கோவில் செல்கிறேன். மாணவர்கள் மும்மூவராக நிற்கின்றனர். மாணவிகள் நான்கு நான்காக நிற்கிறார்கள். தந்தை ஐந்தைந்தாக பழங்களைத் தருகிறார். நான் அடிக்கடி ஜலம் குடிக்கிறேன். அவன் தினமும் இரண்டு*

தடவை சாப்பிடுகிறான்.

## त्रयोदशः पाठः — பாடம் 13

तुं त्वा என்ற விகுதிகள் சேர்ந்து வரும் அவ்யயங்கள் கீழே உள்ள இரட்டை வாக்கியங்களைக் கவனிக்கவும்:

रामः पठति — रामः पाठालयं गच्छति।

कृष्णः क्रीडति — कृष्णः क्रीडाङ्गणं गच्छति।

पिता देवं पूजयति — पिता पुष्पाणि नयति।

अहं स्नामि — अहं नदीं गच्छामि।

त्वं सिनेमां पश्यसि — त्वं प्लासां गच्छसि।

முதல் வாக்கியங்களிலுள்ள पठति, क्रीडति, पूजयति, स्नामि, पश्यसि (படிக்கிறான், விளையாடுகிறான், வழிபடுகிறான், ஸ்னானம் செய்கிறேன், பார்க்கிறாய்) என்ற வினைப்பயன் கருதி இரண்டாவது வாக்கியங்களால் குறிப்பிடப்பட்ட செயல்கள் செய்யப்படுகின்றன. உதாரணம்: ராமன் படிப்பதற்காகப் பள்ளிக்குச் செல்கிறான். அப்போது இரு வாக்கியங்களும் ஒன்றாகி விடுகின்றன.

रामः पठितुं पाठशालां गच्छति।
ராமன் படிப்பதற்குப் பள்ளிக்குச் செல்கிறான்.

कृष्णः क्रीडितुं क्रीडाङ्गणं गच्छति।
கிருஷ்ணன் விளையாட மைதானம் செல்கிறான்.

पिता देवं पूजयितुं पुष्पाणि नयति।
தந்தை இறைவனை வழிபட புஷ்பங்களைக் கொண்டு செல்கிறார்.

अहं स्नातुं नदीं गच्छामि।
நான் ஸ்னானம் செய்ய ஆற்றுக்குப் போகிறேன்.

त्वं सिनेमां द्रष्टुं प्लासां गच्छसि।
நீ சினிமா பார்க்க பிளாசாவுக்குச் செல்கிறாய்.

पठ्, क्रीड्, पूज्, स्ना, दृश् - (पश्य) என்ற வினைப்பகுதிகளுடன் 'तुं' (to) என்ற பிரத்யயத்தை (suffix) சேர்த்து पठितुं, क्रीडितुं, पूजयितुं, स्नातुं, द्रष्टुं என்ற சொற்கள் தயாரிக்கப்படுகின்றன. இவைகள் ஏகவசன, துவிவசன, பஹுவசனங்களிலோ, நிகழ்-இறந்த-வருங்-காலங்களிலோ, பிரதம, மத்யம, உத்தம புருஷன்களிலோ எந்த மாறுபாட்டையும் அடைவதில்லை. ஆகவே, அவ்யயங்கள் - மாறுபடாச் சொற்கள். இவற்றை துமுன்னந்த அவ்யயங்கள் என்று கூறுவர்.

இனி மேற்குறிப்பிட்ட ஐந்து வாக்கியங்களையும் இடம் மாறி அமைத்து பொருள் வேறுபடுவதைக் கவனிப்போம்.

१. रामः पाठालयं गच्छति रामः पठति।
२. कृष्णः मैदानं गच्छति कृष्णः क्रीडति।
३. पिता पुष्पाणि नयति पिता देवं पूजयति।
४. अहं नदीं गच्छामि अहं स्नामि।
५. त्वं प्लासां गच्छसि त्वं सिनेमां पश्यसि।

முதல் வாக்கியத்தில் குறிப்பிடப்பட்ட வினைத் தொழில்கள் நடந்த பிறகு, இரண்டாவது வாக்கியத்திலுள்ள வினைத் தொழில்கள் நடைபெறுகின்றன. உதாரணம்

1. ராமன் பள்ளிக்கூடம் சென்று படிக்கிறான்.

2. கிருஷ்ணன் மைதானம் சென்று விளையாடுகிறான்.

3. தந்தை மலர்களைக் கொண்டு சென்று இறைவனை வழிபடுகிறார்.

"சென்று, கொண்டு சென்று" போன்ற சொற்களை गत्वा, नीत्वा என்று त्वा விகுதியைச் சேர்த்து அமைக்கிறோம். இவை அவ்யயங்களே. க்த்வாந்த அவ்யயங்கள் என்று கூறுவர்.

रामः पाठालयं गत्वा पठति।
ராமன் பள்ளிக்கூடம் சென்று படிக்கிறான்.

कृष्णः मैदानं गत्वा क्रीडति।
கிருஷ்ணன் மைதானம் சென்று விளையாடுகிறான்.

पिता पुष्पाणि नीत्वा देवं पूजयति।
தந்தை மலர்களைக் கொண்டு சென்று தேவனை வழிபடுகிறார்.

अहं नदीं गत्वा स्नामि।
நான் ஆற்றுக்குச் சென்று ஸ்நானம் பண்ணுகிறேன்.

त्वं प्लासां गत्वा सिनेमां पश्यसि।
நீ பிளாசாவுக்குச் சென்று சினிமா பார்க்கிறாய்.

கீழே குறிப்பிட்ட இறந்தகால வாக்கியங்களைக் கவனிக்கவும்.

मन्थरा नगरालङ्कारं अपश्यत् - कैकेय्याः समीपं अगच्छत्।
भरतः पितुः उत्तरक्रियां अकरोत् - रामं आनेतुं वनं अगच्छत्।
भरतः पादुके सिंहासने अस्थापयत् - राज्यं अरक्षत्।

முதல் வாக்கியத்திலுள்ள अपश्यत्, अकरोत्, अस्थापयत् என்ற இறந்தகால வினைச்சொற்களை க்த்வாந்த அவ்யயங்களாக மாற்றுவதன் மூலம் இரு வாக்கியங்களையும் ஒன்றாக இணைக்கலாம்.

मन्थरा नगरालङ्कारं दृष्ट्वा कैकेय्याः समीपं अगच्छत्।
மந்தரை நகரின் அலங்காரத்தைப் பார்த்துவிட்டு கைகேயியிடம் சென்றாள்.

भरतः पितुः उत्तरक्रियां कृत्वा रामं आनेतुं वनं अगच्छत्।
பரதன் தந்தையின் ஈமச் சடங்குகளைச் செய்து (செய்துவிட்டு) ராமனை அழைத்துவரக் காடு சென்றான்.

भरतः पादुके सिंहासने स्थापयित्वा राज्यं अरक्षत्।
பரதன் பாதுகைகளை ஸிம்மாஸனத்தில் வைத்து அரசைப் பாதுகாத்தான்.

கீழேயுள்ள கட்டளை வினை இரட்டை வாக்கியங்களைக் கவனிக்கவும்.

त्वं नदीं गच्छ - स्नानं कुरु।
यूयं गुरुं नमत - वेदं पठत।
प्रश्नान् पठत - उत्तरं लिखत।

இவைகளையும் கீழேயுள்ளபடி இணைக்கலாம்.

त्वं नदीं गत्वा स्नानं कुरु।
நீ ஆற்றுக்குச் சென்று ஸ்நானம் செய்.

यूयं गुरुं नत्वा वेदं पठत।
நீங்கள் ஆசிரியரை வணங்கி வேதம் படியுங்கள்.

प्रश्नान् पठित्वा उत्तराणि लिखत।
கேள்விகளைப் படித்து, விடைகளை எழுதுங்கள்.

உதாரணங்களிலிருந்து காலங்களாலோ, வசனங்களாலோ, புருஷன்களாலோ இந்தச் சொற்கள் (**गन्तुं गत्वा, पठितुं पठित्वा** போன்றவை) மாறுவதில்லை. எனவே அவ்யயங்கள் என்று உணரலாம்.

| வினைப்பகுதி | क्त्वान्त शब्दः | तुमुन्नन्त शब्दः |
|---|---|---|
| पठ | पठित्वा | पठितुं |
| படி | படித்து | படிக்க |
| क्रीड | क्रीडित्वा | क्रीडितुं |
| விளையாடு | விளையாடிவிட்டு | விளையாட |
| पूज | पूजयित्वा | पूजयितुं |
| வழிபடு | வழிபட்டு | வழிபட |
| गच्छ | गत्वा | गन्तुं |
| செல் | சென்று | செல்ல |
| नम | नत्वा | नन्तुं |
| வணங்கு | வணங்கி | வணங்க |
| भ्रम | भ्रान्त्वा | भ्रमितुं |
| சுற்ற | சுற்றி | சுற்ற |
| नी नय | नीत्वा | नेतुं |
| கொண்டு செல் | கொண்டு சென்று | கொண்டு செல்ல் |
| पा पिब | पीत्वा | पातुं |
| குடி | குடித்து | குடிக்க |
| जि जय | जित्वा | जेतुं |
| வெல் | வென்று | வெல்ல |
| पाल | पालयित्वा | पालयितुं |
| காப்பாற்று | காப்பாற்றி | காப்பாற்ற |
| पत | पतित्वा | पतितुं |
| வீழ் | விழுந்து | விழுவதற்கு |

| | | |
|---|---|---|
| वस | उषित्वा | वस्तुं |
| வசி | வசித்து | வசிக்க |
| चर | चरित्वा | चरितुं |
| அலை | அலைந்து | அலைய |
| यज | इष्ट्वा | यष्टुं |
| வேள்வி செய் | வேள்வி செய்து | வேள்வி செய்ய |
| मार | मारयित्वा | मारयितुं |
| கொல் | கொன்று | கொல்ல |
| तर्ज | तर्जयित्वा | तर्जयितुं |
| அதட்டு | அதட்டி | அதட்ட |
| कथ | कथयित्वा | कथयितुं |
| சொல் | சொல்லிவிட்டு | சொல்ல |
| रच | रचयित्वा | रचयितुं |
| அமை | அமைத்து | அமைக்க |
| भक्ष | भक्षयित्वा | भक्षयितुं |
| சாப்பிட | சாப்பிட்டு | சாப்பிட |
| अट | अटित्वा | अटितुं |
| திரி | திரிந்து | திரிய |
| वम | वमित्वा | वमितुं |
| கக்கு | கக்கி விட்டு | கக்க |

*பயிற்சி: தமிழில் மொழி பெயர்க்கவும்.*

सः क्षीरं पीत्वा पाठं पठति।
रामः मन्दिरं गत्वा देवं नमति।
यदा गोपालः अत्र आगच्छति तदा अहं अपि आगच्छामि।
कृष्णः स्नातुं नदीं गच्छति।
वयं भ्रमितुं बहिः गच्छामः।

## चतुर्दशः पाठः — பாடம் 14

### उपसर्गाः உபஸர்க்கங்கள்

*உபஸர்க்கங்கள் என்ற சில அவ்யயச் சொற்கள் ஸம்ஸ்கிருதத்தில் உண்டு. அவை பெரும்பாலும் வினைப்பகுதிகளின் முன்னர் இணையும்.*

प्र परा अप सं अनु अव निस् निर् दुस् दुर् वि आ नि अधि अपि सु उत् अति अभि प्रति परि उप

*என்று அவை மொத்தம் 22 என்று கூறுவர். இவற்றிற்குச் சாதாரண அவ்யயச் சொற்களைப் போல் தனியே பொருள் இல்லை. தனியே உபயோகமில்லை. என்றாலும் வினைச் சொற்களுடன் சேரும்போது தாதுவின் பொருளைப் பலவாறு மாற்றும் வல்லமை பெறுகின்றன.* हृ-हर-हरति *கொண்டு போகிறான் என்ற வினைச் சொல் உபஸர்க்கங்களுடன் சேரும்போது எவ்வாறு மாறுகின்றது என்பதைப் பார்ப்போம்.*

| | | | |
|---|---|---|---|
| प्र | हृ | प्रहरति *அடிக்கிறான்* | प्रहरः *அடி* |
| आ | हृ | आहरति *உணவு அருந்துகிறான்* | आहारः *உணவு* |
| सं | हृ | संहरति *கொல்கிறான்* | संहारः *கொலை* |
| वि | हृ | विहरति *விளையாடுகிறான்* | विहारः *விளையாட்டு* |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| परि | हृ | परिहरति | நீக்குகிறான் | परिहारः | பரிகாரம் |
| उद् | हृ | उद्धरति | தூக்குகிறான், நிமிர்த்துகிறான் | उद्धारः | தூக்குதல், நிமிர்த்தல். |
| अप | हृ | अपहरति | திருடுகிறான் | अपहारः | திருட்டு |

चोरः धनं हरति।
திருடன் செல்வத்தைக் கொண்டு போகிறான்.

भीमः राक्षसं प्रहरति।
பீமன் அரக்கனைத் தாக்குகிறான்.

बालकः मोदकं आहरति।
சிறுவன் கொழுக்கட்டையை உண்கிறான்.

रामः राक्षसान् संहरति।
ராமன் அரக்கர்களை அழிக்கிறான்.

बालाः सैकते विहरन्ति।
சிறுவர்கள் ஆற்று மணலில் விளையாடுகிறார்கள்.

वैद्यः औषधैः व्याधीन् परिहरति।
வைத்யர் மருந்துகளால் வியாதிகளை நீக்குகிறார்.

सर्पः फणां उद्धरति।
பாம்பு படத்தைத் தூக்குகிறது.

कृष्णः नवनीतं अपहरति।
கண்ணன் வெண்ணையைத் திருடுகிறான்.

### உபஸர்க்கங்களால் ஏற்படும் மாறுதல்கள்

1. சில உபஸர்க்கங்கள் தாதுவின் அர்த்தத்தை எதிர்க்கின்றன.

गच्छति याति போகிறான்　　आगच्छति आयाति வருகிறான்

नयति हरति கொண்டு செல்கிறான் — आनयति आहरति கொண்டு வருகிறான்.

ददाति यच्छति கொடுக்கிறான் — आददाति आयच्छति ஏற்கிறான்.

स्मरति நினைக்கிறான் — विस्मरति மறக்கிறான்.

2. சில தாதுவின் பொருளை மாற்றுவதில்லை. அலங்காரமாய் அமைகின்றன.

जयति வெல்கிறான் — विजयते வெல்கிறான்

विशति நுழைகிறான் — प्रविशति நுழைகிறான்

3. சில தாதுவின் பொருளை மாற்றுகின்றன. அப்போது செயப்படு பொருள்கள் குன்றாவினை (Transitive) குன்றியதாகவும், செயப்படு பொருள் குன்றியவினை (Intransitive) குன்றாதனவாகவும் மாறும்.

तिष्ठति நிற்கிறான் — अनुतिष्ठति அனுஷ்டிக்கிறான், செய்கிறான்.

भवति இருக்கிறான் — अनुभवति அனுபவிக்கிறான்

भवति இருக்கிறான் — अभिभवति அவமதிக்கிறான், தோற்கடிக்கிறான்.

4. தாதுவின் மூலப் பொருளை ஒட்டிக் கொஞ்சம் மாறுகின்றன (விசேஷப்படுத்துகின்றன). गच्छति செல்கிறான். अनु + गच्छति பின்னே செல்கிறான். उप + गच्छति அருகே செல்கிறான். सं + गच्छते ஒன்றுகூடிச் செல்கிறான். उद् + गच्छति மேலே செல்கிறது (எழும்புகிறது). ईक्षते பார்க்கிறான். परि + ईक्षते = परीक्षते

சோதித்துப் பார்க்கிறான். सं + ईक्षते = समीक्षते ஆராய்ந்து பார்க்கிறான். उद् + ईक्षते = उदीक्षते அண்ணாந்து பார்க்கிறான். अप + ईक्षते = अपेक्षते தேவை என்ற எண்ணத்துடன் பார்க்கிறான், விரும்புகிறான். वदन्ति கருத்தொற்றுமையுடன் ஒருவருக்கொருவர் பேசுகிறார்கள். सं + वदन्ति ஸம்பாஷிக்கிறார்கள். वि + सं + वदन्ते = கருத்தொற்றுமை இல்லாமல் ஒருவருக்கொருவர் பேசுகிறார்கள்.

5. சில வினைச்சொல்லின் தொடர்பில்லாத பொருளைத் தருகின்றன. व्यायच्छति - திறக்கிறான். निगमयति பொருந்தச் செய்கிறான். अभिभवति எதிர்க்கிறான்.

தமிழில் மொழி பெயர்க்கவும்.

धनिकः दरिद्रेभ्यः धनं ददाति - यच्छति।

दरिद्रः धनिकात् धनं आददाति।

अहं गृहस्य द्वारं व्याददामि - व्यायच्छामि।

राजा शत्रुं जयति - विजयते।

धेनवः गोष्ठं विशन्ति - प्रविशन्ति।

साधवः अपि दुःखं अनुभवन्ति।

दुष्टाः साधून् अभिभवन्ति।

वत्सः मातरं अनुगच्छति।

शिष्याः गुरुं उपगच्छन्ति।

ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கவும்.

ஆசிரியர் மாணவனைப் பரீக்ஷிக்கிறார்.

பண்டிதர் கவிதையை ஆராய்ந்து பார்க்கிறார்.

உழவன் வானத்தை அண்ணாந்து பார்க்கிறான்.

கெட்டவன் நல்லவனுடைய வார்த்தையை அலக்ஷியப்படுத்துகிறான்.

மாணவர்கள் வெற்றியை விரும்புகிறார்கள்.

# पञ्चदशः पाठः — பாடம் 15

## भविष्यत् कालः வருங்காலம்

## 1. विधिलिङ्। (POTENTIAL MOOD)

இதுவரை நிகழ்காலம், இறந்த காலம், கட்டளை என்ற மூன்று வகை வினைச் சொற்களைக் கற்றோம். கீழே வரும் பாடங்களில் வருங்காலம் பற்றி விளக்கம் தரப்படுகிறது. போவான், போகப் போகிறான், வருவான், வரப்போகிறான் என்ற சொற்கள் வருங்காலத்தைக் குறிப்பிட்டாலும், சிறிது பொருள் வேறுபடுவதுண்டு. போவான், வருவான் என்பவை போகக்கூடும், வரக்கூடும் என்று சிறிது ஐயப்பாட்டுடன் வருங்காலத்தைக் குறிப்பிடுகின்றன. போகப் போகிறான், வரப்போகிறான் என்பவை நிச்சயத்தையும் சேர்த்து வருங்காலத்தைக் குறிப்பிடுகின்றன.

சந்தேகத்துடன் கூடிய வருங்காலத்தைக் குறிப்பிடும்போது நம்பிக்கைக்கே முக்கியத்துவம் தரப்படுகிறது. இதை ஆங்கில இலக்கண முறையில் Potential mood என்பர். ஸம்ஸ்கிருதத்தில் विधिलिङ् என்பர். விதிலிங் வடிவங்களைக் காண்போம்.

| | | | |
|---|---|---|---|
| प्रथमपुरुषः | पठेत् | पठेतां | पठेयुः |
| मध्यमपुरुषः | पठेः | पठेतं | पठेत |
| उत्तमपुरुषः | पठेयं | पठेव | पठेम |

ईत् ईतां ईयुः ईः ईतं ईत ईयं ईव ईम என்பவை இதன் விகுதிகள். राम ईश्वर = रामेश्वर என்று மாறுவதுபோல் पठ् + अ + ईत् = पठेत् என்று மாறுதலடைகிறது.

अहं सायङ्काले आलयं गच्छेयम्।

நான் மாலை கோவிலுக்குப் போவேன்.

किं (अपि) त्वं रात्रौ क्षीरं पिबेः ?

நீ இரவில் பால் குடிப்பாயா?

सः अद्य आगच्छेत्।

அவன் இன்று வருவான்.

बालाः प्रातः प्रबुध्येयुः, स्नात्वा काफीं पीत्वा पाठान् पठेयुः, भुक्त्वा पाठशालां गच्छेयुः।

சிறுவர்கள் காலை எழுந்திருப்பார்கள். குளித்து காபி குடித்து விட்டு பாடம் படிப்பார்கள். சாப்பிட்டுவிட்டுப் பள்ளி செல்வார்கள்.

त्वं कदा गृहं आगच्छेः ?

நீ எப்பொழுது வீட்டிற்கு வருவாய்?

सः सूर्योदयात् पूर्वं शयनात् उत्तिष्ठेत्।

அவன் சூர்யோதயத்திற்குமுன் படுக்கையிலிருந்து எழுந்திருப்பான்.

त्वं निपुणः। प्रश्नानां उत्तराणि वदेः।

நீ கெட்டிக்காரன். கேள்விகளுக்கு விடை கூறுவாய்.

अद्य राधा जयलक्ष्मीश्च गायेताम्।

இன்று ராதாவும் ஜெயலக்ஷ்மியும் பாடுவார்கள்.

ग्रीष्मे तडागाः शुष्येयुः।

கோடையில் குளங்கள் வற்றிப் போய்விடும்.

उदकेन तृष्णा शाम्येत्।

தண்ணீரால் தாகம் தணியும்.

सत्यं वदेत्।

உண்மையைப் பேச வேண்டும்.

असत्यं न वदेत्।

பொய் பேசக் கூடாது.

परस्वं न हरेत्।

பிறர் பொருளைக் கவரக்கூடாது.

उद्यन्तं सूर्यं न पश्येत्।

உதயமாகும் சூரியனைப் பார்க்கக் கூடாது.

धयन्तीं गां न वारयेत्।

பால் கொடுக்கும் பசுவைத் தடை செய்யக் கூடாது.

रात्रौ वृक्षमूलानि परिवर्जयेत्।

இரவில் மரத்தடிகளைத் தவிர்க்க வேண்டும்.

பயிற்சி: கீழேயுள்ள வினைகளுக்கு 'विधिलिङ्' மூன்று நிலைகளிலும் எழுதுக.

वद्, पिब, यज, चर, भक्ष, वस।

विधिलिङ् வினைச்சொற்களுக்கு - சொல்லலாம், திருடலாம், காணலாம், தடுக்கலாம், தவிர்க்கலாம் என்றவாறு பொருள். பொய் கூறக்கூடாது. உண்மை சொல்லலாம் என்று பொருள் சொன்னால் 'அவர் ஒருவருக்கு மட்டும் பொருந்துகிறது. மற்றவர்களுக்கு இல்லை' என்பது கிடையாது. 'நான் உண்மை பேசலாம். நீ பேசாமலிருக்கலாம்'' என்று பொருள் கூறுவது பொருந்தாது. ஆகவே, கட்டளையாகப் பொருள் கூறப்பட்டுள்ளது. ஆகவே, எல்லோருக்கும் பொதுவாக உள்ளவற்றைக் கட்டளையாகவே ஏற்க வேண்டும். கட்டளை வினையால் தனிப்பட்டவருக்கு இடப்படும் கட்டளை குறிப்பிடப்படுகிறது. Potential moodஆல் பொது விதி குறிப்பிடப்படுகிறது. ஆகவே, Potential mood நம்பிக்கை, பொதுவிதி என்ற இரு பொருள்களை முக்கியமாகக் குறிக்கிறது.

## अनुवादमाला — २०

माधवः — नीलकण्ठ! स्वागतं ते।

नीलकण्ठः — आगच्छ! कियद् दूरं पर्यटेम।

माधवः — साधु। मातः! अहं नीलकण्ठेन सह पर्यटितुं गच्छामि।

माता — अस्तु। तक्रं पीत्वा गच्छतम्। शीघ्रं च प्रत्यागच्छतम्। (उभौ तक्रं पीत्वा निर्गच्छतः)

नीलकण्ठः — कथय। की दृशः ते विद्याभ्यासः?

माधवः — सम्यक् पठामि। प्रतिदिनं पाठ्यान् पाठान् पठित्वैव शयनाय गच्छेयम्।

नीलकण्ठः — कदा त्वं शयनात् उत्तिष्ठेः?

माधवः — प्रातः चतुर्थ्यां होरायां उत्तिष्ठेयम्। उत्थाय ईश्वरं स्मरेयम्। ततः दन्तान् क्षालयेयम्।

नीलकण्ठः — पाठान् न पठेः किम्?

माधवः — सार्धपञ्चमहोरापर्यन्तं पठेयम्। ततः स्नात्वा स्तोत्राणि पठित्वा क्षीरं पिबेयम्। अत्रान्तरे रामदासः शिवगुरुः च मम गृहं आगच्छेताम्।

नीलकण्ठः — कौ तौ रामदासशिवगुरू?

माधवः — प्रातिवेशिकौ वयस्यौ सतीर्थ्यौ। वयं सहैव गणितं - अभ्यस्येम, लेख्यानि च लिखेम।

नीलकण्ठः — कियदवधि यूयं पठेत?

माधवः — प्रायः सार्धनवमहोरावधि (होरापर्यन्तं) पठेम।

नीलकण्ठः — ततः?

माधवः — ततः तौ स्वगृहं गच्छेताम्। भुक्त्वा पाठशालायै सज्जौ भवेताम्। अहमपि सज्जो भवेयम्। वयं त्रयः सहैव गच्छेम।

नीलकण्ठः — पाठशालायां मध्याह्नविरामः कदा भवेत्?

माधवः — त्रयोदशहोरातः चतुर्दशहोरापर्यन्तं विरामो भवेत्। तदा वयं आहारं कृत्वा संलेपम। पत्रिकाः पठेम।

नीलकण्ठः — किं सर्वे बालाः पत्रिकाः पठेयुः?

माधवः — न, न। केचित् पठेयुः। केचित् गृहं गत्वा आगच्छेयुः। अन्ये मैदाने तरुतलेषु क्रीडेयुः।

नीलकण्ठः — सायङ्काले कदा गृहं आगच्छेः?

माधवः — सायङ्काले सार्धचतुर्थहोरायां पाठशाला विरमेत्। ततः मुहूर्तं व्यायामाभ्यासः भवेत्। ततः गृहं आगच्छेम।

नीलकण्ठः — गृहे सायङ्कालं कथं नयेः?

माधवः — गृहे सोदरीं बालिकां क्रीडनकैः विनोदयेयम्। ततः प्रदोषे आलयं गत्वा देवं नमेयम्। गृहं प्रत्यागत्य भुक्त्वा दशमहोरापर्यन्तं तस्मिन् दिने पठितान् पाठान् चिन्तयेयम्।

नीलकण्ठः — समीचीना ते दिनचर्या। इदानीं गृहं प्रतिगच्छेव। (उभौ गृहं प्रत्यागच्छतः)

மேற்கண்டவற்றைத் தமிழில் மொழி பெயர்க்கவும்:-

[स्वागतं - *நல்வரவு;* कियद्दूरं - *சிறிது தூரம்;* निर्गच्छतः - *வெளிக் கிளம்புகிறார்கள்;* पर्यटेम - *உலாவி வருவோம்;* सार्ध पञ्चमहोरा - *ஐந்தரை மணி;* प्रातिवेशिकः

-எதிர்வீட்டுக்காரர்; सतीर्थ्यः - வகுப்புத் தோழர்; कियदवधि -எதுவரை; सार्धनवम - ஒன்பதரை; व्यायामाभ्यासः -உடற்பயிற்சி; मुहूर्तं - சிறிது நேரம்; चिन्तयेयं - சிந்தனை செய்வேன்; अभ्यस्येम - படித்து எழுதிப் பழகுவோம்; सज्जः - தயாராயிருப்பவன்.]

ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கவும்

1. தருமம் செய்ய வேண்டும்.
2. இரவில் ஒருவனாகச் செல்லக் கூடாது.
3. எப்போதும் பிறர் நலத்தையே நினைக்க வேண்டும்.
4. மழை பெய்யும்போது ஓடக் கூடாது.
5. பாழும் வீட்டில் ஒருவனாக வசிக்கக் கூடாது.
6. நண்பர்களுக்குத் துரோகம் செய்யக் கூடாது.
7. பெரியோர்களிடம் வணக்கமுடையவனாக இருக்க வேண்டும்.
8. கோள் சொல்பவனாக இருக்கக் கூடாது.
9. எப்போதும் விழிப்புடையவனாக (ஜாக்கிரதையாக) இருக்க வேண்டும்.

[चरेत् - செய்ய வேண்டும்; एकाकी - ஒருவனாக; वर्षति - மழை பெய்யும் போது; शून्यगृहे - பாழும் வீட்டில்; मित्रेभ्यः - நண்பர்களுக்கு; विनीतः - வணக்கமுடையவன்; पिशुनः - கோள் சொல்பவன்; जागरूकः - விழிப்பு உடையவன்.]

# षोडशः पाठः — பாடம் 16

## भविष्यत्कालः வருங்காலம் (2) (FUTURE TENSE)

| | | | | |
|---|---|---|---|---|
| पठिष्यति | *படிக்கப் போகிறான்* | पठ् | इष्य | ति |
| रक्षिष्यसि | *காப்பாற்றப் போகிறாய்* | रक्ष् | इष्य | सि |
| चरिष्यामि | *திரியப் போகிறேன்* | चर् | इष्य | मि |
| लिखिष्यावः | *இருவர் எழுதப் போகிறோம்* | लिख् | इष्य | वः |
| क्रीडिष्यामः | *விளையாடப் போகிறோம்* | क्रीड् | इष्य | मः |
| गमिष्यन्ति | *செல்லப் போகிறார்கள்* | गम् | इष्य | अन्ति |
| पास्यति | *குடிக்கப் போகிறான்* | पा | स्य | ति |
| वत्स्यति | *வசிக்கப் போகிறான்* | वस् | स्य | ति |
| स्थास्यथ | *நிற்க/இருக்கப் போகிறீர்கள்* | स्था | स्य | थ |

*சென்ற பாடத்தில்* विधिलिङ् *(சந்தேகத்துடன் கூடிய வருங்காலம்) பற்றிக் கற்றோம். இப்பாடத்தில் நிச்சயத்துடன் கூடிய வருங்காலம் காட்டும் வினைச்சொற்களைக் கற்போம். இச்சொற்களில்* लुट्, लृट् *என இரு வகைகள் உண்டு.* लुट् *அதிகம் வழக்கில் இல்லை.* लृट् *அதிகம் வழக்கில் உள்ளது. அதன் உதாரணங்கள் மேலே தரப்பட்டுள்ளன.*

*பாடம் 11ல் தாது + விகரணபிரத்யயம் + விகுதி = வினைச்சொல் என்று படித்தோம்.* भविष्यत् काल *த்தில் தாது + வருங்காலம் காட்டும் இடைநிலை + விகுதி = வினைச் சொல் என்பது சூத்ரமாய் அமைகிறது.* स्य *என்பது* भविष्यत्

काल பிரத்யயம். அது சில தாதுக்களுடன் சேரும் போது इ என்ற எழுத்தைச் சேர்த்துக் கொண்டு इष्य என்று மாறுகிறது. சில இடத்தில் इ எடுத்துக் கொள்ளாமல் स्य என்றோ, ष्य என்றோ காணப்படுகிறது.

மற்றொரு விசேஷமும் கவனிக்க வேண்டும். சில தாதுக்கள் இரட்டைத் தாதுக்கள். உதாரணம் गम् (गच्छ) पा (पिब) स्था (तिष्ठ) இவை போன்றவற்றில் गम् पा स्था போன்ற முதலாவது பகுதியின் அடிப்படையிலேதான் வருங்கால வினைச்சொற்களைத் தயாரிக்க வேண்டும். गच्छ पिब तिष्ठ என்ற இரண்டாவது வினைப் பகுதியின் அடிப்படையில் நிகழ்காலம், இறந்தகாலம், கட்டளை, சந்தேகத்துடன் கூடிய வருங்காலம் இவை அமைந்தன. உதாரணம் पिबति, अपिबत्, पिबतु, पिबेत् என. ஆனால் गमिष्यति, पास्यति, स्थास्यति என்று முதல் பகுதி அமைப்பில் உள்ள சரியான வருங்கால வினைச் சொற்கள்.

எந்த வினைச் சொற்களுக்கு इष्य என்ற இடைநிலை வரும்? எவற்றுக்கு स्य என்ற இடைநிலை வரும் என்று தீர்மானிப்பது சிக்கலானது.

## अनुवादमाला — २१

श्वः अहं चेन्नपुरीं गमिष्यामि। त्वं कदा मह्यं पुस्तकं दास्यसि? श्वः सायं गृहं आगच्छ, पुस्तकं दास्यामि। परश्वः मम स्वसुः विवाहः भविष्यति। बान्धवाः मम गृहं आगमिष्यन्ति। मासस्य अन्ते दीपावलीमहोत्सवः भविष्यति। सूर्योदयात् पूर्वं जनाः तैलस्नानं करिष्यन्ति। नूतनवस्त्राणि धारयिष्यन्ति। भक्ष्याणि भक्षयिष्यन्ति। मित्रेभ्यः तानि वितरिष्यन्ति। परस्परं गङ्गास्नानं प्रक्ष्यन्ति। बालकाः

प्रस्फोटान् स्फोटयिष्यन्ति। बालिकाः ज्वालिनीः दीपयिष्यन्ति। तस्मिन् दिने पाठशाला न प्रचलिष्यति। सर्वे कार्यालयाः च न प्रचलिष्यन्ति।

மேற்கண்டவற்றைத் தமிழில் மொழிபெயர்க்கவும்:

[प्रक्ष्यन्ति - கேட்பார்கள்; प्रस्फोटः - வெடி; ज्वालिनी - மத்தாப்பூ; वितरिष्यन्ति - தருவார்கள்.]

ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்க்கவும்.

1. என் தந்தை காசிக்குச் செல்லப் போகிறார்.

2. நான் கடிதம் எழுதப் போகிறேன்.

3. ராமேச்வரத்திலிருந்து ரயில் வரப்போகிறது.

4. ராமன் இல்லாமல் ஸீதை எப்படி உயிர் வாழப் போகிறாள்?

5. அவர்கள் உண்மையைச் சொல்லப் போகிறார்கள்.

6. இன்று தலைமையாசிரியர் பரிசுகளைக் கொடுக்கப் போகிறார்.

7. இன்று ஸங்கீத ஸபையில் ஸ்ரீ பாலமுரளி கிருஷ்ணா பாடப் போகிறார்.

[पट्टिकयानं - ரயில்; पारितोषिकं - பரிசு; गास्यति - பாடப் போகிறார்; रामं विना - ராமன் இல்லாமல்.]

## सप्तदशः पाठः — பாடம் 17

### लृङ् நிபந்தனை **Conditional Mood**

ஸம்ஸ்க்ருத பாஷையில் காலம் காட்டும் வினைச் சொற்கள் (Tenses) ஆறு வகைப்படும். நிகழ்காலம் (वर्तमान कालः) ஒரு வகைதான் உண்டு. இறந்தகாலம் (भूत कालः)

மூன்று வகையாக உள்ளது. வருங்காலம் (भविष्यत् कालः) இரண்டு வகையாக உள்ளது. இவற்றில் நிகழ்காலம், இறந்த காலம், வருங்காலம் (லட், லங், ல்ருட்) (गच्छति-अगच्छत्-गमिष्यति) வகைக்கு ஒன்று கற்றோம். இறந்த காலத்தில் உள்ள மற்ற இரண்டு வகைகள் (லுங், லிட்) அதிகம் வழக்கில் உள்ளவைகளானாலும் சற்று கடினமானவை. வருங்காலத்தின் மற்றொரு வகை (லுட்) அதிகம் வழக்கில் இல்லாதது. எனவே, அவற்றைப் பின்னர் கற்போம்.

காலம் காட்டாத வினைச் சொற்கள் (Moods) நான்கு வகைப்படும். அவற்றில் கட்டளை - லோட் (आज्ञार्थकं), பொதுவிதி - விதிலிங் (विधिलिङ्) என்ற இரண்டு வகைகளை முன் பாடங்களில் கற்றோம். வாழ்த்து ஆசீர்லிங் (आशीर्लिङ्) என்று ஒரு வகை உள்ளது. நிபந்தனையை (हेतु-हेतुमद्भावः) குறிப்பிடும் வினைச் சொல் வகையை இப்பாடத்தில் கற்போம்.

पठति पठतः पठन्ति, लिखति लिखतः लिखन्ति என்ற நிகழ்கால வினைச்சொற்கள் अपठत् अपठतां अपठन्, अलिखत् अलिखतां अलिखन् என்று இறந்தகால வினைச்சொற்களாக மாறுகின்றன என்பது உங்களுக்குத் தெரியும். வினைச் சொற்களுக்கு முன்னால் 'अ' வைச் சேர்க்கிறோம். ति, तः, अन्ति என்ற நிகழ்கால விகுதிகளுக்குப் பதிலாக त्, तां, अन् என்ற இறந்தகால விகுதியைப் பின்னால் சேர்க்கிறோம். पठति पठतः पठन्ति என்ற வினைச் சொற்கள் अपठत् अपठतां अपठन् என்று மாறி வருகின்றன.

அதுபோல் पठिष्यति पठिष्यतः पठिष्यन्ति என்ற வருங்கால

வினைச்சொற்கள் अपठिष्यत् अपठिष्यतां अपठिष्यन् என்று மாறி நிபந்தனையைக் குறிப்பிடுகின்றன.

நிபந்தனை என்றால் என்ன?

நான் பணம் தருகிறேன். கடைக்காரர் சாமான் தருகிறார்.

நீ நன்கு படித்தாய். பரீக்ஷையில் வெற்றி பெற்றாய்.

நான் சென்னை செல்லப் போகிறேன். அவனைப் பார்க்கப் போகிறேன்.

இந்த இரட்டை வாக்கியங்களை நான் பணம் தருகிறேனானால் கடைக்காரர் சாமான் தருவார். நீ நன்கு படித்திருந்தால் பரீக்ஷையில் வெற்றி பெற்றிருப்பாய். நான் சென்னை செல்வேனானால் அவனைப் பார்ப்பேன் என்று இணைக்கலாம்.

இவை நிபந்தனையை (हेतु-हेतुमद्भावः) ஒன்று மற்றொன்றுக்குக் காரணமாயிருப்பதைத் தெரிவிக்கின்றனவேயன்றி நிகழ்காலத்தையோ, இறந்தகாலத்தையோ, வருங்காலத்தையோ குறிப்பிடுவதில்லை.

अहं धनं यच्छामि, आपणिकः धान्यं यच्छति। (நான் பணம் தருகிறேன், கடைக்காரர் சாமான் தருகிறார்) என்ற வாக்கியம் यदि अहं धनं अदास्यं, तर्हि आपणिकः धान्यं अदास्यत् (நான் பணம் தருவேனானால் கடைக்காரர் தான்யம் தருவார்) என்று மாறுகிறது.

त्वं सम्यक् अपठः, परीक्षायां उत्तीर्णः अभवः। (நீ நன்கு படித்தாய், பரீக்ஷையில் தேறியவன் ஆனாய்) என்ற வாக்கியம் यदि त्वं सम्यक् अपठिष्यः, परीक्षायां उत्तीर्णः अभविष्यः। (நீ நன்கு படித்திருந்தால் பரீக்ஷையில் தேறியவனாக ஆகியிருப்பாய்) என்று மாறுகிறது.

यदि तर्हि (If so) என்ற அவ்யயங்கள் இந்த நிபந்தனையைக் குறிப்பிடுகின்றன.

| வினைப்பகுதி | நிகழ்காலம் | இறந்தகாலம் | வருங்காலம் | நிபந்தனை |
|---|---|---|---|---|
| दा-यच्छ | यच्छति | अयच्छत् | दास्यति | अदास्यत् |
| पठ | पठति | अपठत् | पठिष्यति | अपठिष्यत् |
| भू-भव | भवसि | अभवः | भविष्यसि | अभविष्यः |
| गम्-गच्छ् | गच्छामि | अगच्छं | गमिष्यामि | अगमिष्यं |
| दृश-पश्य | पश्यामि | अपश्यं | द्रक्ष्यामि | अद्रक्ष्यम् |

மேலே காட்டிய பட்டியலிலிருந்து நிகழ்கால வினைச்சொற்களின் அடிப்படையிலிருந்து இறந்தகால வினைச்சொற்கள் அமைவதுபோல், வருங்கால வினைச்சொற்களின் அடிப்படையிலிருந்து நிபந்தனை வினைச்சொற்கள் அமைகின்றன என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

கீழே சில உதாரணங்கள் தரப்படுகின்றன.

यदि हनुमान् समुद्रं न अतरिष्यत्, तर्हि रामः सीतं न आप्स्यत्।
அனுமான் கடலைக் கடந்திராவிட்டால் ராமன் சீதையைப் பெற்றிருக்க முடியாது.

यदि त्वं मम अग्निप्रवेशं न अद्रक्ष्यः, तर्हि तव इयं आज्ञा समीचीना अभविष्यत्।
நீ எனது தீக்குளியலைக் கண்டிருந்திராவிட்டால் உனது இக்கட்டளை நேர்மையானதாக இருந்திருக்கும்.

यदि मम गर्भगतं तव अपत्यं न अन्तरायः अभविष्यत्, तर्हि अहं प्राणं अत्यक्ष्यम्।
உனது கருவில் உள்ள உன் குழந்தை தடையாக இராவிட்டால் நான் உயிர் விட்டிருப்பேன்.

यदि वयं पाठं सम्यक् अपठिष्याम तर्हि वयं उत्तीर्णाः अभविष्याम।
*நாம் பாடம் நன்கு படித்திருந்தோமானால் பரீக்ஷையில் தேறியவர்களாக இருப்போம்.*

## अनुवादमाला — २२

इदं किम्? इयं मम लेखिनी।

तत् किम्? तत् मम शिरस्त्राणम्।

तव निचोलकं कुत्र वर्तते?

मम निचोलकं पेटिकायां विद्यते।

पुष्पं कुत्र वर्तते? पुष्पं शिरसि मया निहितम्।

कन्दुकं कुतो न दृश्यते? कन्दुकं भस्त्रिकायां विद्यते।

[शिरस्त्राणं - *தலைப்பாகை;* निचोलकं - *சட்டை;* शिरसि - *தலையில்;* निहितं - *வைக்கப்பட்டுள்ளது;* भस्त्रिका - *பை.*]

## अनुवादमाला — २३

रामः देशीयविद्याशालायां पठति। सः छात्रालये वसति। सः नवम्यां कक्ष्यायां ग. वर्गे पठति। सः सायं क्रीडाङ्गणे कन्दुकेन खेलति। सः पाठान् सम्यक् पठति। तस्य पिता मधुरायां वसति। छात्रालयाय देयं सः धनादेशेन प्रेषयति। छात्रालये वासाय प्रतिमासं शतं रूप्यकाणि देयानि। तत्र शतं अपवरकाः सन्ति। एकस्मिन् अपवरके चत्वारः माणवकाः वसन्ति।

[छात्रालयः - *மாணவர் விடுதி;* कक्ष्या - *வகுப்பு;* वर्गः - *பிரிவு (செக்ஷன்);* क्रीडाङ्गणं - *விளையாட்டு மைதானம்;* देयं - *கொடுக்க வேண்டியது - கட்டணம்;* धनादेशः - *மணியார்டர்;* अपवरकः - *அறை.*]

## अनुवादमाला — २४

अस्यां कक्ष्यायां सप्त वर्गाः सन्ति। क. वर्गः, ख. वर्गः, ग. वर्गः, घ. वर्गः, ङ. वर्गः, च. वर्गः, छ. वर्गः इति तेषां नाम। एकस्मिन् वर्गे त्रिंशत् माणवकाः पठन्ति। पञ्चानां माणवकानां एकः नेता। तव वर्गे कति नेतारः सन्ति? मम कक्ष्यायां पञ्च नेतारः भवन्ति। मम वर्गे गोपालः रामुः च पठतः। किं श्रीनिवासः वासुदेवः च तव वर्गे पठतः? श्रीनिवासः मम वर्गे पठति। वासुदेवः च. वर्गे पठति।

[नेता - *தலைவர்.*]

## अनुवादमाला — २५

मम कक्ष्यायां त्रिचतुराः विद्यार्थिनः पुरस्कारान् लभन्ते। अस्मिन् वत्सरे रामुः सर्वेषां माणवकानां उत्तमः। तस्मै पञ्चषाणि पुस्तकानि पारितोषिकाणि दत्तानि। श्रीनिवासः कक्ष्यायां द्वितीयः। तस्मै लेखिनी दत्ता। रमा तृतीया। तस्यै पेटी दत्ता। अहमपि पारितोषिकाय स्पृहयामि। अतः सम्यक् पाठान् पठामि।

[पुरस्कारः, पारितोषिकम् - *பரிசு.*]

## अष्टादशः पाठः — பாடம் 18

१. हलन्त शब्दाः மெய்யெழுத்தில் முடிந்த சொற்கள்

*முந்தைய பாடங்களில்* अजन्त (अ, इ, उ, ऋ *என்ற உயிர் எழுத்தில் முடிந்த) சப்தங்களைக் கற்றோம். இனி* हलन्त *(மெய்யெழுத்துக்களில் முடிந்த) சப்தங்களைக் கற்போம். மெய்யெழுத்து 34. எல்லா மெய்யெழுத்துக்களிலும் முடிந்த சொற்கள் இல்லை. இருந்தாலும் வழக்கில் அதிகமில்லை.* च् ज् त् द् न् भ् र् व् श् ष् स् ह् *என்ற 12 எழுத்துக்களில் முடியும் சொற்கள் அதிகம் வழக்கில் உள்ளன. அவற்றிலும்*

புல்லிங்க, ஸ்த்ரீலிங்க, நபும்ஸகலிங்கச் சொற்கள் உண்டு. கீழே हलन्त சொற்களின் பகுதியும் அதன் முதல் வேற்றுமை ரூபமும், பொருளும் தரப்படுகின்றன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| जलमुच् | पुं | जलमुक् | जलमुचौ | जलमुचः | மேகம் |
| वाच् | स्त्री | वाक् | वाचौ | वाचः | வாக்கு |
| भिषज् | पुं | भिषक् | भिषजौ | भिषजः | வைத்தியன் |
| स्रज् | स्त्री | स्रक् | स्रजौ | स्रजः | மாலை |
| असृज् | न | असृक् | असृजी | असृञ्जि | ரத்தம் |
| मरुत् | पुं | मरुत् | मरुतौ | मरुतः | காற்று |
| सरित् | स्त्री | सरित् | सरितौ | सरितः | நதி |
| जगत् | न | जगत् | जगती | जगन्ति | உலகம் |
| पचत् | पुं | पचन् | पचन्तौ | पचन्तः | சமைக்கின்ற |
| पचत् | स्त्री | पचन्ती | पचन्त्यौ | पचन्त्यः | சமைக்கின்ற |
| पचत् | न | पचत् | पचती | पचन्ति | சமைக்கின்ற |
| धीमत् | पुं | धीमान् | धीमन्तौ | धीमन्तः | புத்தியுள்ள |
| धीमती | स्त्री | धीमती | धीमत्यौ | धीमत्यः | புத்தியுள்ள |
| धीमत् | न | धीमत् | धीमती | धीमन्ति | புத்தியுள்ள |
| महत् | पुं | महान् | महान्तौ | महान्तः | பெருமையுள்ள |
| महत् | स्त्री | महती | महत्यौ | महत्यः | பெருமையுள்ள |
| महत् | न | महत् | महती | महन्ति | பெருமையுள்ள |
| दिविषद् | पुं | दिविषत् | दिविषदौ | दिविषदः | தேவர் |
| ककुद् | स्त्री | ककुत् | ककुदौ | ककुदः | திமில் |
| हृद् | न | हृत् | हृदी | हृन्दि | ஹ்ருதயம் |
| क्षुध् | स्त्री | क्षुत् | क्षुधौ | क्षुधः | பசி |

குறிப்பு:

1. நபும்ஸகலிங்கச் சொற்கள் மூன்றாம் வேற்றுமையிலிருந்து புல்லிங்கச் சொற்கள் போல் வரும்.

2. तकारान्तச் சொற்கள் நான்கு வகைகளாக ஆகின்றன. मरुत् என்பது சாதாரண तकारान्त பதம். पचत् धीमत् महत् என்ற तकारान्तச் சொற்கள் ஒன்றுக்கு ஒன்று அதிக வேறுபாடு அடைகின்றன.

3. पचत् धीमत् महत् என்பவை விசேஷணச் சொற்கள். எனவே, 3 லிங்கங்களிலும் வரும். ஸ்திரீலிங்கத்தில் அவை ई என்ற ஸ்த்ரீலிங்கப் பிரத்யயத்தை எடுத்துக் கொண்டு पचन्ती धीमती महती என்று गौरी சப்தம்போல் ரூபங்களைப் பெறுகின்றன.

இவைகளின் சப்த ரூபங்கள் கற்க எளிதானவை. சிறிது வேறுபாடுகளையே அடைந்து பெரும்பாலும் ஒன்றுபோல் வருகின்றன.

१. "जलमुच्" शब्दः चकारान्तः पुंलिङ्गः - மேகம்

வேற்றுமை உருபுகள்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| प्र | जलमुक् | जलमुचौ | जलमुचः | स् | औ | अः |
| द्वि | जलमुचं | जलमुचौ | जलमुचः | अं | औ | अः |
| तृ | जलमुचा | जलमुग्भ्यां | जलमुग्भिः | आ | भ्यां | भिः |
| च | जलमुचे | जलमुग्भ्यां | जलमुग्भ्यः | ए | भ्यां | भ्यः |
| पं | जलमुचः | जलमुग्भ्यां | जलमुग्भ्यः | अः | भ्यां | भ्यः |
| ष | जलमुचः | जलमुचोः | जलमुचां | अः | ओः | आं |
| स | जलमुचि | जलमुचोः | जलमुक्षु | इ | ओः | सु |
| सं-प्र | हे जलमुक् | जलमुचौ | जलमुचः | स् | औ | अः |

பெரும்பாலும் भ्यां भिः भ्यः सु என்று விகுதிகள் சேரும்போது முன்னுள்ள மெய்யெழுத்துக்கள் சிறிது வேறுபடுகின்றன. प्रथमैकवचन த்தில் स् மறைந்தே விடுகிறது. மற்ற இடங்களில் வெறும் கூட்டலே.

२. ''वाच्'' शब्दः चकारान्तः स्त्रीलिङ्गः - வாக்கு

| | | |
|---|---|---|
| वाक् | वाचौ | वाचः |
| वाचं | वाचौ | वाचः |
| वाचा | वाग्भ्यां | वाग्भिः |

மற்றவை புல்லிங்கத்தைப் போலவே உள்ளது. 7ம் வேற்றுமை பன்மை वाक्षु

३. ''भिषज्'' शब्दः जकारान्तः पुंलिङ्गः - வைத்யர்

| | | |
|---|---|---|
| भिषक् | भिषजौ | भिषजः |
| भिषजं | भिषजौ | भिषजः |
| भिषजा | भिषग्भ्यां | भिषग्भिः |

இதுபோல மற்ற வேற்றுமைகளையும் எழுதவும். 7ம் வேற்றுமை பன்மை भिषक्षु.

४. 'स्रज्' शब्दः जकारान्तः स्त्रीलिङ्गः - மாலை

| | | |
|---|---|---|
| स्रक् | स्रजौ | स्रजः |
| स्रजं | स्रजौ | स्रजः |
| स्रजा | स्रग्भ्यां | स्रग्भिः |

மற்றவை भिषज् போல், 7ம் வேற்றுமை பன்மை स्रक्षु

५. 'असृज् शब्दः जकारान्तः नपुंसकलिंगः - இரத்தம்

| | | |
|---|---|---|
| असृक् | असृजी | असृञ्जि |
| असृक् | असृजी | असृञ्जि |
| असृजा | असृग्भ्यां | असृग्भिः |

மற்றவை भिषज् போல். 7ம் வேற்றுமை பன்மை असृक्षु

६. 'मरुत्' शब्दः तकारान्तः पुंलिङ्गः - காற்று

| | | |
|---|---|---|
| मरुत् | मरुतौ | मरुतः |
| मरुतं | मरुतौ | मरुतः |
| मरुता | मरुद्भ्यां | मरुद्भिः |

இதுபோல் எல்லா வேற்றுமைகளையும் எழுதவும். 7ம் வேற்றுமை பன்மை मरुत्सु

७. 'सरित्' शब्दः तकारान्तः स्त्रीलिङ्गः - ஆறு

| | | |
|---|---|---|
| सरित् | सरितौ | सरितः |
| सरितं | सरितौ | सरितः |
| सरिता | सरिद्भ्यां | सरिद्भिः |

மேல் புல்லிங்கத்தைப்போல், 7ம் வேற்றுமை பன்மை सरित्सु

७. 'जगत्' शब्दः तकारान्तः नपुंसकलिङ्गः - உலகம்

| | | |
|---|---|---|
| जगत् | जगती | जगन्ति |
| जगत् | जगती | जगन्ति |
| जगता | जगद्भ्यां | जगद्भिः |

மற்ற வேற்றுமைகள் புல்லிங்கத்தைப்போல், 7ம் வேற்றுமை பன்மை जगत्सु

**கவனிக்கவும்:** मरुत् जगत् सरित् என்ற तकारान्त சாதாரண சப்தங்களை மூன்று லிங்கங்களிலும் கற்றுக் கொண்டோம். இனி पचत् धीमत् महत् என்ற மூன்று விசேஷ வகைகள் விளக்கப்படுகின்றன.

९. 'पचत्' शब्दः तकारान्तः पुंलिङ्गः *(2வது)*

| | | |
|---|---|---|
| पचन् | पचन्तौ | पचन्तः |
| पचन्तं | पचन्तौ | पचतः |
| पचता | पचद्भ्यां | पचद्भिः |

*மற்ற வேற்றுமைகள்* **मरुत्** *சப்தத்தைப் போல், 7ம் வேற்றுமை பன்மை* **पचत्सु.**

*இந்த சப்தம் முதல் 5 எண்களில்* **मरुत्** *சப்தத்திலிருந்து வேறுபடுகிறது.* **पचत्** *என்ற சொல்லுக்கு 'சமைக்கின்ற' என்று பொருள். இது நிகழ்வினை எச்சம்* (Present Participle). *இது போல்* **गच्छन्** *(செல்கின்ற),* **पठन्** *(படிக்கின்ற),* **लिखन्** *(எழுதுகின்ற) போன்ற சொற்கள் அமைகின்றன.* **परस्मैपद** *தாதுக்களின் வினைப் பகுதிகளுடன்* **अत्** *என்ற நிகழ்கால வினையெச்ச விகுதியைச் சேர்த்தால்* **लिखत्, पश्यत्, कुष्यत्, कथयत्** *போன்ற நிகழ்கால வினை எச்சங்கள் கிடைக்கும். அது பும்லிங்கத்தில் முதல் வேற்றுமையிலும், இரண்டாம் வேற்றுமையிலும் மேலே கண்டவாறு மாறுபடுகிறது. ஸ்திரீலிங்கத்தில்* **पचन्ती, लिखन्ती, पश्यन्ती, कुष्यन्ती, कथयन्ती** *என்றெல்லாம் மாறுபடுகிறது. நபும்ஸகலிங்கத்தில்* **पचत्, लिखत्, पश्यत्, कुष्यत्, कथयत्** *என்று* **जगत्** *சப்தத்தைப்போல் ரூபங்களைப் பெறுகிறது. ஸ்திரீலிங்கத்திலும், நபும்ஸகலிங்கத்திலும்* **पचत्** *போன்ற சப்தங்களின் ரூபங்கள் தரப்படுகின்றன.*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| पचन्ती | पचन्त्यौ | पचन्त्यः | पचत् | पचती | पचन्ति |
| पचन्तीं | पचन्त्यौ | पचन्तीः | पचत् | पचती | पचन्ति |
| पचन्त्या | पचन्तीभ्यां | पचन्तीभिः | पचता | पचद्भ्यां | पचद्भिः |

*மற்றவை* **गौरी** *சப்தம் போல். மற்றவை* **जगत्** *சப்தம்போல்*

குறிப்பு: पचन्ति என்ற இந்தச் சொல் पचत् என்ற நபும்ஸகலிங்கச் சொல்லின் முதல் இரண்டு வேற்றுமைகளின் பன்மையாக வரும். रथ्यायां पचन्ति कुटुम्बानि (தெருவில் சமைக்கின்ற குடும்பங்கள் என்ற பொருளில்) விசேஷணமாக வருகிறது. இதே சொல் गृहेषु स्त्रियः अन्नं पचन्ति என்று வரும்போது பெண்டிர் வீடுகளில் உணவு சமைக்கின்றனர் என்று நிகழ்கால வினைச் சொல்லாக வருகிறது.

கீழே சில உதாரண வாக்கியங்கள் தரப்படுகின்றன.

१. गोपबालाः कृष्णं पश्यन्ति।
இடைச் சிறுவர்கள் கண்ணனைக் காண்கிறார்கள்.

कृष्णं पश्यन्ति नेत्राणि न तृप्यन्ति।
கண்ணனைக் காண்கின்ற கண்கள் திருப்தி அடைகிறதில்லை.

२. ग्रीष्मे तृणानि शुष्यन्ति।
கோடையில் புற்கள் உலர்ந்து போகின்றன.

गावः शुष्यन्ति तृणानि न भक्षयन्ति।
பசுக்கள் உலர்கின்ற புற்களைச் சாப்பிடுகிறதில்லை.

३. लतासु कुसुमानि विकसन्ति।
கொடிகளில் புஷ்பங்கள் மலர்கின்றன.

बाला विकसन्ति कुसुमानि आनयति।
சிறுமி மலர்கின்ற புஷ்பங்களைக் கொண்டு வருகிறாள்.

४. आतपे आमलकबीजानि स्फुटन्ति।

*வெயிலில் நெல்லி விதைகள் வெடிக்கின்றன.*

स्फुटन्ति आमलकबीजानि सर्वतः प्रसरन्ति।

*வெடிக்கின்ற நெல்லி விதைகள் எங்கும் பரவுகின்றன.*

மேலே கொடுக்கப்பட்ட வாக்கிய இணைகளில் पश्यन्ति, शुष्यन्ति, विकसन्ति, स्फुटन्ति என்ற சொற்கள் வினைச் சொற்களாகவும், வினையெச்சங்களாகவும் உபயோகப்-பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

இனி மூன்றாவது வகையைக் கவனிப்போம்.

१०. 'धीमत्' शब्दः तकारान्तः पुंलिङ्गः 3வது வகை

| | | |
|---|---|---|
| धीमान् | धीमन्तौ | धीमन्तः |
| धीमन्तं | धीमन्तौ | धीमतः |
| धीमता | धीमद्भ्यां | धीमद्भिः |

மற்ற வேற்றுமைகள் முன்போல். धीमान् என்பதற்குப் புத்தி உடையவன் என்று பொருள். अ அல்லது आ வில் முடிந்த பண்புப் பெயர்களுடன் वत् என்ற பிரத்யயம் சேரும். (உதாரணம்) धन, बल, गुण, दया, क्रिया, माला என்ற சொற்கள் धनवत्, बलवत्, गुणवत्, दयावत्, क्रियावत्, मालावत् என்று ஆகின்றன.

| | | |
|---|---|---|
| धनवान् | धनवन्तौ | धनवन्तः |
| बलवान् | बलवन्तौ | बलवन्तः |
| गुणवान् | गुणवन्तौ | गुणवन्तः |
| दयावान् | दयावन्तौ | दयावन्तः |
| क्रियावान् | क्रियावन्तौ | क्रियावन्तः |
| मालावान् | मालावन्तौ | मालावन्तः |

என்ற ரூபங்கள் வரும்.

1. கீழேயுள்ள சொற்களுக்கு ஸம்ஸ்க்ருத பதங்களை எழுதுக. வெடிக்கிறது, சமைக்கிறாள், பார்க்கிறான், பரவுகிறது, எழுதுகிறான், கோபிக்கின்ற, மலர்கின்ற.

2. पचत्, धीमत्, पश्यन्ति என்ற சப்தங்களின் 4, 6, 7 வேற்றுமை ரூபங்களை எழுதுக.

3. கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்து முழு வாக்கியத்தை எழுதுக.

रामः ______ पत्रं ______ [लिख्]

ते गृहे अन्नं ______ ।

लताः भूमौ ______ वर्षाकाले ______ ।

धनवान् दरिद्रेभ्यः ______ ।

## एकोनविंशः पाठः — பாடம் 19

### ஹலந்த சப்தங்கள் (2)

इ उ ऋ இந்த எழுத்துக்களில் முடியும் பண்புப் பெயர்களுடன் मत् என்ற பிரத்யயம் சேரும். உதாரணம் बुद्धि, श्री, धी, पशु, वसु, पितृ, भ्रातृ போன்ற சொற்கள் बुद्धिमत्, श्रीमत्, धीमत्, पशुमत्, वसुमत्, पितृमत्, भ्रातृमत् என்று ஆகின்றன.

| | | |
|---|---|---|
| श्रीमान् | श्रीमन्तौ | श्रीमन्तः |
| धीमान् | धीमन्तौ | धीमन्तः |
| वसुमान् | वसुमन्तौ | वसुमन्तः |
| पितृमान् | पितृमन्तौ | पितृमन्तः |

| ஸ்திரீலிங்கத்தில் | | | நபும்ஸகலிங்கத்தில் | | |
|---|---|---|---|---|---|
| श्रीमती | श्रीमत्यौ | श्रीमत्यः | श्रीमत् | श्रीमती | श्रीमन्ति |
| धीमती | धीमत्यौ | धीमत्यः | धीमत् | धीमती | धीमन्ति |
| वसुमती | वसुमत्यौ | वसुमत्यः | वसुमत् | वसुमती | वसुमन्ति |
| पितृमती | पितृमत्यौ | पितृमत्यः | पितृमत् | पितृमती | पितृमन्ति |

*குறிப்பு:* भवत् *என்ற சொல்* भू, भव *என்ற தாதுவின் நிகழ்கால வினையெச்சம். இருக்கின்ற என்று பொருள். இதை* पचन् पचन्ती पचत् *என்பதைப்போல் சொல்ல வேண்டும்.* भवत् *என்ற ஒரு* सर्वनाम*ச் சொல்லும் உண்டு. தாங்கள் என்று பொருள். மரியாதையைக் குறிக்கும். அச்சொல்* धनवत् *சப்தத்தைப்போல் உருவம் பெறுகிறது.*

भवान् भवन्तौ भवन्तः (पुंलिङ्ग) *தாங்கள்*

भवती भवत्यौ भवत्यः (स्त्रीलिंग) *தாங்கள்*

*நபும்ஸகலிங்கத்தில் உபயோகமில்லை.*

*இந்த* वत्-मत् *விதிகளுக்குப் பல விதிவிலக்குகள் உண்டு. உதாரணம்* यव *(நெல் போன்ற தானியம்) என்ற சொல்* यवमान् *(யவதான்யம் படைத்தவன்) என்றும்* लक्ष्मी *(செல்வம், அழகு, திருமகள்) என்ற சொல்* लक्ष्मीवान् *(செல்வமுடையவன், அழகுடையவன், நாராயணன்) என்றும் மாறுதல் அடைகின்றன.*

1 வே महान् महान्तौ महान्तः

2 வே महान्तं महान्तौ महतः

3 வே महता महद्भ्यां महद्भिः

*மற்ற வேற்றுமைகள் முன்போல்*

இச்சொல் प्रथमा विभक्ति முழுவதிலும், द्वितीया विभक्ति யின் एकवचन द्विवचनங்களிலும், महान् महान्तौ என்று நெடிலாக ரூபங்களைப் பெறுகிறது. ஸ்திரீலிங்கத்திலும் நபும்ஸகலிங்கத்திலும் ரூபங்கள் கீழே தரப்படுகின்றன.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1 வே | महती | महत्यौ | महत्यः | महत् | महती | महान्ति |
| 2 வே | महतीं | महत्यौ | महतीः | महत् | महती | महान्ति |
| 3 வே | महत्या | महतीभ्यां | महतीभिः | महता | महद्भ्यां | महद्भिः |

இவைகளை ஒப்பிட்டுப் பார்ப்போம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| मरुत् | — | मरुत् | मरुतौ | मरुतः | मरुतं | मरुतौ | मरुतः |
| पचत् | — | पचन् | पचन्तौ | पचन्तः | पचन्तं | पचन्तौ | पचतः |
| धीमात् | — | धीमान् | धीमन्तौ | धीमन्तः | धीमन्तं | धीमन्तौ | धीमतः |
| महत् | — | महान् | महान्तौ | महान्तः | महान्तं | महान्तौ | महतः |

குறிப்பு:

1. मरुत् சப்தம் சாதாரணமானது. पचत् சப்தம் அதில் இருந்து வேறுபடுகிறது. धीमत् சப்தம் पचत् லிருந்து வேறுபடுகின்றது. महत् சப்தம் धीमत्லிருந்து வேறுபடுகின்றது. இவ்வாறு முன்னதைவிட பிந்தையது மேன்மேலும் வேறுபடுவதைக் கவனிக்க வேண்டும்.

2. पचत् धीमत् महत् என்ற சப்தங்கள் விசேஷணச் சொற்கள். எனவே, ஒரே பகுதியிலிருந்து மூன்று லிங்கங்களாலும் ரூபங்கள் ஏற்படுகின்றன. ஸ்திரீலிங்கத்தில் கௌரீ சப்தம் போலவும், நபும்ஸகலிங்கத்தில் ஜகத் சப்தத்தைப் போலவும் ரூபங்களைப் பெறுகின்றன. महत् சப்தம் மட்டும் महान्ति என முதல் வேற்றுமை பன்மையில் ஆகிறது.

## अनुवादमाला — २६

जलमुचां सङ्घर्षेण विद्युत् उद्भवति। विद्युतां प्रकाशः क्षणिकः। उपन्यासकः मधुरया वाचा जनान् प्रीणयति। द्वौ भिषजौ रोगिणः परीक्षां कुरुतः। दमयन्ती वरणस्रजं नलस्य कण्ठे अर्पयति स्म। छिन्नायाः अंगुलेः असृजः बिन्दवः अपतन्। वृक्षाणां पर्णानि मरुता चलन्ति। मरुतः रूपं नास्ति। स्पर्शेन मरुतं अवगच्छामः। भारतदेशे गङ्गा यमुना गोदावरी इत्यादयः पुण्याः सरितः प्रवहन्ति। गोदावरीसरितः समीपे पञ्चवट्यां रामः सीतया सह अवसत्। बाला सरितः जलमानेतुं गच्छति। ईश्वरः विचित्रं जगत् सृजति। जगति विचित्राः स्थावराः जङ्गमाः जीवाः अजीवाः च सन्ति। अत्र निर्झरस्य पृषन्ति अस्मान् आर्द्रयन्ति। पर्वतं आरोहन्तः जनाः दीर्घं निःश्वसन्ति। बालाः मैदाने धावन्तः उत्पतन्तः हसन्तः कन्दुकं क्षिपन्तः च विहरन्ति। गङ्गोत्तर्याः निर्गच्छन्ती गङ्गा शिखरेभ्यः अवतरन्ती हरिद्वारे समभूमिं प्रविशति। यमुनोत्तर्याः आगच्छन्ती यमुना प्रयागे गङ्गया मिलति। बालाः वृक्षात् पतन्ति जम्बूफलानि सङ्कलयन्ति। भ्रमराः विकसत्सु पुष्पेषु मधु पिबन्ति। अयं बालः धावन्तं कन्दुकं अनुधावति। "इक्ष्वाकुवम्शप्रभवः रामः धृतिमान् बुद्धिमान् नीतिमान् गुणवान् श्रीमान्" इति नारदः अवर्णयत्। इमाः कन्याः गुणवत्यः रूपवत्यः बुद्धिमत्यः च। लोके यत् यत् विभूतिमत् श्रीमत् ऊर्जितं तत् तत् भगवतः अम्शभूतम्। शुद्धिमति सूर्यवम्शे रामः अवातरत्। महतां दर्शनं क्षेमाय। तेषां उपदेशश्रवणमपि क्षेमाय। गिरिः महान्। गिरेः अब्धिः महान्। अब्धेः नभः महत्। नभसः अपि ब्रह्म महत्। ततः अपि आशा महीयसी। महद्भ्यो नमः। महान्तः परहिताय प्राणानपि त्यजन्ति। महता प्रयासेन धनं सम्पादितम्। तञ्जानगरे बृहदीश्वरस्य आलयः महान्। तत्र द्वारे महान् नन्दी वर्तते। अन्तः महतीं लिङ्गस्य आकृतिं पश्यामः।

## अनुवादमाला — २७

हर् என்ற தாது பறிக்க என்று பொருள்படும். இந்த தாதுவுடன் உபஸர்க்கங்கள் சேரும்போது பொருள் மாறுபடுவதை 14ம் பாடத்தில் கண்டோம். அதன் தொடர்பில் சில வாக்கியங்கள். இவற்றைத் தமிழில் மொழிபெயர்க்கவும்.

सः अजं हरति। त्वं धनं अहरः। रामः गुरवे फलानि आहरति। अहं उद्यानात् पूजायै पुष्पाणि आहरामि। त्वं कदा पुस्तकानि आहरेः ? विमला कमलां कपोले प्रहरति। भीमः सुयोधनं गदया प्राहरत्। रामः रावणं समहरत्। हरिश्चन्द्रः असत्यं परिहरति। त्वं हिंसां परिहर। पानाय शुद्धं जलं आहर। अशुद्धं जलं परिहर। यदा अहं रुग्णः अभवं, तदा मम माता शीतं जलं पर्यहरत्, उष्णमेव जलं मह्यं अयच्छत्। त्वं कृष्णेन सह विहर, दुष्टेन रविणा सह मा विहर। सः उद्याने मित्रैः साकं कन्दुकैः विहरति। अहं बाल्ये नद्याः पुलिने व्यहरम्। चोरः गृहे स्थितं वस्तु अपाहरत्। अहं सत्यं व्याहरामि। रामुरपि कदाचित् असत्यं व्याहरेत्। साधुः गोपालदासः धर्मेण व्यवहरति। माणवकः गुरवे शुल्कं उपहरति। आचार्याय त्वं प्रियं वस्तु उपहर। आचार्यः असकृत् रामायणात् वाक्यानि उदाहरति। अहं सत्यस्य निरूपणाय पूर्ववृत्तं उदाहरम्। विष्णुः मीनः भूत्वा वेदं उदहरत्। वराहः भूत्वा समुद्रे मग्नां भूमिं उदहरत्। कमठः भूत्वा मन्दरं गिरिं उदहरत्। त्वं सदा सत्यं व्याहर। अप्रियं मा व्याहर। अहं तथ्यं व्याहरामि। कविः मङ्गलश्लोकेन काव्यं उपसंहरति ।

[कपोलं - கன்னம்; रुग्णः - நோயுற்றவன்; पुलिनं - மணல்திட்டு; शुल्कं - சம்பளம்; असकृत् - அடிக்கடி; पूर्ववृत्तं - முன் நடந்தது; मीनः - மீன்; वराहः - பன்றி; कमठः

- ஆமை; मग्नाः - அமிழ்ந்திருந்த; मन्दरः - மந்தரம் என்ற பெயருள்ள மலை; तथ्यं - நடந்தது நடந்தபடி, உண்மை.]

## अनुवादमाला — २८

*தமிழில் மொழிபெயர்க்கவும்:*

ईश्वरात् जगत् उद्भवति। ततः अस्य जगतः ईश्वरः एव कर्ता। महतः अल्पस्य च वस्तुनः जगत् एव आधारः। मम नगरे महतः गिरेः उपरि विनायकः अस्ति। खगाः महान्तं वृक्षं अधिवसन्ति। पतन्तं बालं माता रक्षति। तव माता किं पचन्ती आस्ते? इयं भारतभूमिः वसुमती। बुद्धिमन्तः जनाः अस्यां वसन्ति। बुद्धिमति शिष्ये गुरोः प्रीतिः वर्धते। श्रीमान् रामुः यन्त्रशालां निर्वहति। लक्ष्मीवते वराय कन्यां यच्छेः। विद्यावान् नरः सभासु पूजां लभते। देवि! मां श्रीमन्तं विनयवन्तं भक्तिमन्तं भाग्यवन्तं च कुरु। जगतः गुरुः कृष्णः। भूषणवती कन्या सुन्दरी भवति। ह्रीमती बाला अपरिचितं आगतं अतिथिं अपश्यत्, गृहस्य अन्तः अधावत्।

[खगः - பட்சி; अधिवसति - குடியிருக்கிறான்; यन्त्रशाला - தொழிற்சாலை; ह्रीमती - நாணமுள்ள; अपरिचितः - பழக்கமில்லாத, அறிமுகமாகாத.]

## विंशः पाठः — பாடம் 20

[गोकुले एकस्याः गोपिकायाः गृहम्। प्रदोषवेला गोपिका महानसे तिष्ठति। कृष्णः तद्गृहं प्रविशति। अपवरकं प्रविश्य नवनीतं चोरयित्वा भक्षयति। तालिकाशब्दं श्रुत्वा आगता गोपी कृष्णं दृष्ट्वा तं भर्त्सयति।]

गोपिका —अरे कस्त्वम्?

कृष्णः —[भीतः अपि अभीतः इव] अहं कृष्णः। बलरामः अस्ति किल? तस्य अनुजः। बलरामः मम अग्रजः।

गोपिका —अस्तु। किं इह रे? न इदं तव गृहम्। कुतः अत्र आगच्छ?

कृष्णः —[सभयं मनसि चिन्तयित्वा वदति] मम गृहं इव आसीत्। बालः किल? अन्तः आगच्छम्।

गोपिका —किं तव गृहं एवं अस्ति? अनृतं वदसि।

कृष्णः —(सधैर्यं) नैव। सत्यं, मम मन्दिरं इति शङ्कया आगच्छम्।

गोपिका —[सकोपं] कुतः अपवरकस्य अन्तः आगच्छः? नवनीतपात्रे हस्तं किमर्थं अक्षिपः?

कृष्णः —मातः!

गोपिका —अरे किं अहं तव माता!

कृष्णः —[सचातुर्यं] त्वं मम माता इव। यदा अहं नवनीतपात्रे हस्तं क्षिपामि तदा मम मातापि एवमेव पृच्छति।

गोपिका —कथं पृच्छति?

कृष्णः —नवनीतपात्रे हस्तं किमर्थं क्षिपसि इति।

गोपिका —त्वं चोरः।

कृष्णः —नैव। मम गृहे गोवत्सः कुत्रापि नष्टः।

गोपिका —सः अपवरके कथं स्यात्?

कृष्णः —सः नवनीतपात्रे निलीनः स्यादिति मत्वा हस्तं अक्षिपम्।

गोपिका —किं सः आसीत्?

कृष्णः —न आसीत्। नवनीतं हस्ते लग्नम्। तदेव जिह्वया अलिक्षम्।

गोपिका —किं त्वं मुग्धः ? किं चतुरः ?

कृष्णः —न मुग्धः। नापि चतुरः। गच्छामि। वत्सं मार्गयामि। मा विषीद। [कृष्णः धावति]

गोपिका —अहो धन्या यशोदा! चतुरः कृष्णः मां मोहयति।

अधरं मधुरं वदनं मधुरं नयनं मधुरं हसितं मधुरम्।
वचनं मधुरं गमनं मधुरं मधुराधिपतेः अखिलं मधुरम्॥

[अपवरकं - *அறை;* तालिका - *தாழ்ப்பாள்;* भर्त्सयति - *அதட்டுகிறாள்;* अभीतः - *பயப்படாதவன்;* शङ्कया - *சந்தேகத்தால்;* गोवत्सः - *பசுவின் கன்று;* लग्नं - *ஒட்டியது;* अलिक्षं - *நக்கினேன்;* मुग्धः - *அசடு;* मा विषीद - *வருந்தாதே;* धन्या - *பாக்கியசாலி;* मोहयति - *மயக்குகிறான்.*]

**மேற்கண்டவற்றின் தமிழாக்கம்:**

*கோகுலத்தில் ஒரு கோபிகையின் வீடு. மாலை வேளை. கோபிகை சமையலறையில் இருக்கிறாள். கிருஷ்ணன் அந்த வீட்டிற்குள் நுழைகிறான். அறைக்குள் நுழைந்து வெண்ணையைத் திருடித் தின்கிறான். தாழ்ப்பாளின் ஓசை கேட்டு வந்த கோபி கிருஷ்ணனை அதட்டுகிறாள்.*

**கோபிகை** — *அடே யார் நீ?*

**கிருஷ்ணன்** — *(பயந்தும் பயப்படாதவன் போல்) நான் கிருஷ்ணன். பலராமன் இருக்கிறான் அல்லவா? அவனுடைய தம்பி. பலராமன் என் அண்ணன்.*

**கோபிகை** — *இருக்கட்டும் இங்கு என்னடா? இது உன் வீடு இல்லை. ஏன் இங்கு வந்தாய்?*

கிருஷ்ணன் — *(பயத்துடன், மனத்தில் சிந்தித்துக் கூறுகிறான்)* என் வீடுபோல் இருந்தது. சிறுவனல்லவா? உள்ளே வந்தேன்.

கோபிகை — என்ன உன் வீடு இப்படி இருக்கிறதா? பொய் சொல்கிறாய்.

கிருஷ்ணன் — *(தைரியத்துடன்)* இல்லவே இல்லை. உண்மையாகவே என் வீடு என்ற சந்தேகத்தினால் வந்தேன்.

கோபிகை — *(கோபத்துடன்)* எதற்காக அறைக்குள் சென்றாய்? வெண்ணெய்ப் பாத்திரத்தில் ஏன் கை வைத்தாய்?

கிருஷ்ணன் — அம்மா!

கோபிகை — அடே நான் உன் தாயா?

கிருஷ்ணன் — *(சாதுர்யமாய்)* நீ என் தாய் மாதிரி. எப்பொழுது வெண்ணெய்ப் பாத்திரத்தில் கை வைக்கிறேனோ அப்பொழுது என் அம்மாவும் இப்படிக் கேட்கிறாள்.

கோபிகை — எப்படிக் கேட்கிறாள்?

கிருஷ்ணன் — வெண்ணெய்ப் பாத்திரத்தில் ஏன் கை வைக்கிறாய் என்று...

கோபிகை — நீ திருடன்.

கிருஷ்ணன் — இல்லவே இல்லை. என் வீட்டில் கன்று எங்கேயோ தொலைந்து விட்டது.

கோபிகை — அது அறையில் எப்படி இருக்கும்?

கிருஷ்ணன் — அது வெண்ணெய்ப் பாத்திரத்தில் ஒளிந்திருக்கலாம் என்று நினைத்துக் கை வைத்தேன்.

கோபிகை — அது இருந்ததா?

கிருஷ்ணன் — இல்லை. வெண்ணெய் கையில் ஒட்டியது. அதை நாக்கால் நக்கினேன்.

கோபிகை — நீ அசடா? கெட்டிக்காரனா?

கிருஷ்ணன் — அசடும் இல்லை. கெட்டிக்காரனுமில்லை. போகிறேன். கன்றைத் தேடுகிறேன். வருந்தாதே. (கிருஷ்ணன் ஓடுகிறான்).

கோபிகை — என்னே பாக்கியசாலி யசோதா! கெட்டிக்காரனான கிருஷ்ணன் என்னை மயக்குகிறான்.

உதடு இனியது! முகம் இனியது! கண் இனியது! சிரிப்பு இனியது! பேச்சு இனியது! நடை இனியது! மதுரை மன்னனின் எல்லாம் இனியது.

## एकविंशः पाठः — பாடம் 21

### पद्यानि செய்யுட்கள்

ஸம்ஸ்கிருதத்தில் வசன நடையை गद्यं என்றும் செய்யுள் நடையை पद्यं என்றும் கூறுவர். மகாகவி பாணருடைய कादम्बरी என்ற நூல் गद्यकाव्यं (வசன காவ்யம்). வால்மீகியின் रामायणं पद्यकाव्यं (செய்யுள் காவ்யம்). இதுவரை கொஞ்சம் வசன நடை பயின்றோம். செய்யுளும் வசனமே. ஆனால் சில சமயம் சொற்கள் யாப்பு இலக்கணத்திற்கு ஏற்ப இடம் மாறியிருக்கும். 'நந்த வனத்தில் ஓராண்டி-நாலாறு மாதமாய் குயவனை வேண்டிக் கொண்டு வந்தான் ஒரு தோண்டி'' - என்பது போல், சொற்களுக்குத் தனியே பொருள் தெரிந்துவிட்டால் வசன நடை (Prose order) अन्वयः அமைப்பது கடினமல்ல: செய்யுட்களுக்கு நான்கு அடிகளுண்டு. அடிகளுக்குப் பாதம் என்று பெயர். 2 பாதங்கள் சேர்ந்தது

ஒரு அர்த்தம் - அரைச் செய்யுள். அவற்றில் சில செய்யுட்கள் அர்த்த சுலோகங்களாகத் தரப்படுகின்றன. ஆனால் அவை பாதம் பாதமாய் படிக்கப்பட வேண்டும். அதற்கான இடைவெளி விடப்பட்டுள்ளது. செய்யுள்களைக் கற்போம்.

नभसो भूषणं चन्द्रः नारीणां भूषणं पतिः।
पृथिव्याः भूषणं राजा विद्या सर्वस्य भूषणम्॥

*கடின பதங்கள்:* नभसः - வானத்திற்கு; पृथिव्याः - பூமிக்கு, நாட்டுக்கு; भूषणं - அணிகலன்; विद्या என்ற சொல் இச்செய்யுளில் இடம் மாறியுள்ளது. सर्वस्य भूषणं विद्या என்பது வசன நடை.

*பொருள்:* வானத்திற்கு அணிகலன் சந்திரன். ஸ்திரீகளுக்கு அணிகலன் கணவன். நாட்டிற்கு அணிகலன் அரசன். எல்லோருக்கும் அணிகலன் கல்வி. இதை चन्द्रः नभसः भूषणं, पतिः नारीणां भूषणं, राजा पृथिव्याः भूषणं, विद्या सर्वस्य भूषणं என்றும் சொல்லலாம். அப்போது चन्द्रः पतिः राजा என்ற மூன்று சொற்களும் யாப்பு இலக்கணத்தை ஒட்டி இடம் மாறி வந்துள்ளன என்று அறிய வேண்டும். பொருத்தமாய் பொருள் கூற வேண்டும் என்பதைத் தவிர இவ்வரிசையில்தான் சொற்கள் இருக்க வேண்டும் என்ற நியதியில்லை.

இச் செய்யுளில் 8 எழுத்துக்கள் கொண்ட நான்கு அடிகள் உள்ளன. 16 எழுத்துக்கள் கொண்டது ஒரு அர்த்தம். 32 எழுத்துக்கள் கொண்டது ஒரு முழுச் செய்யுள். இந்த விருத்தத்திற்கு (Metre) अनुष्टुप् என்று பெயர். விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் பெரும்பாலும் இந்த விருத்தத்திலே அமைந்துள்ளது.

இனி கீழே தரப்பட்டுள்ள செய்யுட்களைக் குறிப்பில் உள்ள கடின பதவுரையின் உதவி கொண்டும் விளக்கங்களின் உதவி கொண்டும் கற்றுப் பதவுரை எழுதுங்கள்.

नरस्याभरणं रूपं रूपस्याभरणं गुणः।
गुणस्याभरणं ज्ञानं ज्ञानस्याभरणं क्षमा॥

[नरस्य + आभरणं = नरस्याभरणं-अ+अ = आ என்று மாறியுள்ளது. இதற்கு दीर्घसन्धिः என்று பெயர். क्षमा பொறுமை.]

नास्ति विद्यासमं चक्षुः नास्ति सत्यसमं तपः।
नास्ति रागसमं दुःखं नास्ति त्यागसमं सुखम्॥

[न + अस्ति = नास्ति [दीर्घसन्धिः] चक्षुः - கண்; तपः - தவம்; रागः - ஆசை.]

मक्षिकाः व्रणमिच्छन्ति वनमिच्छन्ति पार्थिवाः।
नीचाः कलहमिच्छन्ति शान्तिमिच्छन्ति साधवः॥

[व्रणं + इच्छन्ति = व्रणमिच्छन्ति இங்கும் + அங்கும் = இங்குமங்கும் என்பதுபோல். முதலடியில் ''காக்கையுகக்கும் பிணம்'' என்ற தமிழ்ச் செய்யுளின் கருத்து அமைந்துவிட்டது. पार्थिवाः - அரசர்கள்; पार्थिवाः साधवः என்ற சொற்கள் இடம் மாறியுள்ளன.]

गुणो भूषयते रूपं शीलं भूषयते कुलम्।
सिद्धिः भूषयते विद्यां भोगो भूषयते धनम्॥

[गुणः + भूषयते = गुणो भूषयते என்று மாறியுள்ளது. भूषयते - பெருமைப்படுத்துகிறது; शीलं - நல்லொழுக்கம்; सिद्धिः - வெற்றி; भोगः - அனுபவம்.]

स्पृशन्नपि गजो हन्ति जिघ्रन्नपि भुजङ्गमः।
हसन्नपि नृपो हन्ति मानयन्नपि दुर्जनः॥

[स्पृशन् + अपि = स्पृशन्नपि. न இரட்டித்திருக்கிறது. स्पृशन्नपि - தொட்டாலும்; भुजङ्गमः - பாம்பு; गजः भुजङ्गमः नृपः दुर्जनः என்ற எழுவாய்கள் இடம் மாறியுள்ளன.]

अवृत्तिकं त्यजेत् राज्यं वृत्तिं सोपद्रवां त्यजेत्।
त्यजेत् मायाविनं मित्रं धनं प्राणहरं त्यजेत्॥

[अवृत्तिकं - பிழைப்பில்லாத; वृत्तिः - பிழைப்பு; सोपद्रवां - துன்பம் நிறைந்த; मायाविनं - கபடமுள்ள; प्राणहरं - உயிரைக் கவருகின்ற.]

न पुत्रात् परमो लाभः न भार्यायाः परं सुखम्।
न धर्मात् परमं मित्रं नानृतात् पातकं परम्॥

[लाभः - லாபம்; (gain); सुखं - சுகம் தரும் பொருள்; न + अनृतात्... नानृतात् (दीर्घसन्धिः); अनृतं - பொய்.]

आपत्सु मित्रं जानीयात् युद्धे शूरं ऋणे शुचिम्।
भार्यां क्षीणेषु वित्तेषु व्यसनेषु च बान्धवान्॥

[जानीयात् - அறிந்து கொள்ள வேண்டும் (பொது வினைச்சொல்); இச்செய்யுளில் 5 வாக்கியங்கள் உள்ளன. शुचिः - தூயவன்; क्षीणेषु, वित्तेषु - பொருளிழந்தபோது.]

## द्वाविंशः पाठः — பாடம் 22

### ஹலந்த சப்தங்கள் (3)

குறிப்பு:

1. सुहृद् என்பது सु + हृद् (நல்ல + இதயம்) என்று இரு சொற்களின் சேர்க்கையில் காரணப் பெயராக நண்பனைக் குறிக்கிறது. दुर्हृद् என்ற சொல் दुर् + हृद् (கெட்ட இதயம்) என்ற இரு சொற்களின் சேர்க்கையால் ஏற்பட்டு எதிரியைக் குறிக்கும்.

2. सद् என்ற சொல்லுக்கு இருக்கின்ற, வாழ்கின்ற என்று பொருள். स्वर्ग + सद् என்பது வானில் வாழ்கின்ற என்ற பொருளில் தேவரைக் குறிக்கும். இதுபோல் जल-सद्, भू-सद्, व्योम-सद् अरण्य-सद् என்ற சொற்கள் முறையே நீரில் வாழ்பவை, தரையில் வாழ்பவை, வானில் வாழ்பவை, காட்டில் வாழ்பவைகளைக் குறிக்கும்.

3. இச்சொற்கள் ''நல்ல இதயம், எண்ணம் உள்ள'' 'நீரில் வாழ்கின்ற'' என்றவாறு விசேஷணங்களாக (Adjectives) வருமாதலால் மூன்று லிங்கங்களிலும் வரும். ஆண்பாலைத் தழுவும்போது ஆண்பாலாகவும், பெண்பாலைத் தழுவும்போது பெண்பாலாகவும் வரும். கீழே உதாரணம் காண்க.

सुग्रीवः रामस्य सुहृत् (ஆ) தோழன்.
शकुन्तलायाः अनसूया प्रियम्वदा इति द्वे सुहृदौ (பெ) தோழிகள்.
कामधेनुः स्वर्गसत् (பெ) சுவர்க்கத்தில் வாழ்பவள்.

लक्ष्मीः पद्मसद् *(பெ) தாமரையில் வீற்றிருப்பவள்.*

ब्रह्माऽपि पद्मसद् *(ஆ) தாமரையில் வீற்றிருப்பவர்.*

ब्रह्मा + अपि = ब्रह्माऽपि (दीर्घसन्धिः)

दकारान्तः स्त्रीलिङ्गः 'सम्पद् शब्दः' செல்வம்

| | | |
|---|---|---|
| सम्पत् | सम्पदौ | सम्पदः |
| सम्पदं | सम्पदौ | सम्पदः |
| सम्पदा | सम्पद्भ्यां | सम्पद्भिः |

*7ம் வேற்றுமை பன்மை* सम्पत्सु

[आपद् - *ஆபத்து;* विपद् - *விபத்து;* सम्सद् - *சபை; இச்சொற்களும்* दकारान्त स्त्रीलिङ्ग*ச் சொற்கள். இவைகள் இடுகுறிப் பெயர்கள். எனவே, மற்ற லிங்கங்களில் வரும் என்ற பிரச்னை இல்லை.*

## त्रयोविंशः पाठः — பாடம் 23

### வினைச் சொற்கள்

*பாணினி ஸம்ஸ்க்ருத மொழியின் முதல் இலக்கண ஆசிரியர். சுமார் 1950 வினைப் பகுதிகளைத் தொகுத்து வகைப்படுத்தி தாதுபாடம் என்ற நூலை எழுதியுள்ளார். அவை மாறுபடும் இயல்பை உற்று நோக்கி 10 கூறுகளாகப் பிரித்தார். கூறுகளை விகரணம் என்பர். ஒவ்வொரு விகரணத்திற்கு ஒரு அடையாளம் (விகரணப்-பிரத்யயம்—*Conjugational Sign*) உண்டு. 1-4-6-10 வது விகரணங்கள் கற்க எளிதானவை. இவை முறையே* अ, य, अ, अय *என்ற அடையாளங்களை ஏற்கின்றன. வினைப்பகுதி + அடையாளம் + விகுதிகளின் கூட்டு வினைச் சொல்லாகும்.* पठ् + अ + ति = पठति। *கீழே 1-4-6-10 வது விகரணங்களின் தாதுக்களை 1. சாதாரண தாதுக்கள்* (simple roots) *2. விதிமுறைக்குட்பட்டு மாறுதலடையும் தாதுக்கள்* (regular

roots), 3. சம்பந்தமில்லாதபடி மாறுதலடையும் தாதுக்கள் (irregular roots) என்று வகைப்படுத்தித் தருகிறோம். சாதாரண தாதுக்களில் எந்த மாறுதல்களும் நிகழ்வதில்லை. 2வது வகையில் தாதுக்களில் ஏற்படும் மாறுதல்களை ஒப்பிட்டு நோக்கின் ஒரு பொதுவிதி அமைக்க முடிகிறது. 3வது வகையில் மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஆனால் எந்த பொது விதியும் அமைக்க முடிவதில்லை. எனவே, இரண்டாவது மூன்றாவது வகைகளில், மாறுதல் ஏற்படுவதற்கு முன் உள்ள உருவம், மாறுதல் ஏற்பட்டபின் உள்ள உருவம், இரண்டையும் சேர்த்துக் குறிப்பிட்டு இரட்டைத் தாதுக்கள் என்று குறிப்பிடுவதுண்டு. (2-3 பகுதிகளைப் பார்க்கவும்)

**முதல் விகரணம் (अ) பரஸ்மைபதம் சாதாரண தாதுக்கள்**

| | | |
|---|---|---|
| अट् | अटति | அலைகிறான் |
| अर्च् | अर्चति | அர்ச்சனை செய்கிறான் |
| अर्ह् | अर्हति | தகுதி பெறுகிறான் |
| अव् | अवति | காப்பாற்றுகிறான் |
| ईर्ष्य | ईर्ष्यति | பொறாமைப்படுகிறான் |
| कांक्ष् | कांक्षति | விரும்புகிறான் |
| कूज् | कूजति | கூவுகிறது |
| क्वण् | क्वणति | ஒலிக்கிறது |
| क्रीड् | क्रीडति | விளையாடுகிறான் |
| खन् | खनति | தோண்டுகிறான் |
| खेल् | खेलति | விளையாடுகிறான் |
| खाद् | खादति | சாப்பிடுகிறான் |
| गद् | गदति | சொல்கிறான் |
| गर्ज् | गर्जति | கர்ஜிக்கிறான் |
| गुञ्ज् | गुञ्जति | ரீங்காரம் செய்கிறது |

| | | |
|---|---|---|
| गूह् | गूहति | மறைக்கிறான் |
| चर् | चरति | அலைகிறான் |
| चल् | चलति | அசைகிறான் |
| चाम | चामति | ஆசமனம் செய்கிறான் |
| चुम्ब् | चुम्बति | முத்தமிடுகிறான் |
| चूष | चूषति | உறிஞ்சுகிறான் |
| जय् | जयति | ஜயிக்கிறான் |
| जल्प् | जल्पति | பிதற்றுகிறான் |
| जीव् | जीवति | உயிர் வாழ்கிறான் |
| ज्वल् | ज्वलति | எரிகிறது |
| तक्ष् | तक्षति | சிதைக்கிறான் |
| दल् | दलति | பிளக்கிறான் |
| दश् | दशति | கடிக்கிறான் |
| नट् | नटति | நடிக்கிறான் |
| नन्द् | नन्दति | மகிழ்கிறான் |
| नद् | नदति | ஒலிக்கிறான் |
| निन्द् | निन्दति | திட்டுகிறான் |
| पठ् | पठति | படிக்கிறான் |
| पत् | पतति | வீழ்கிறான் |
| फल् | फलति | பழுக்கிறது |
| भज् | भजति | நாடுகிறான் |
| भण् | भणति | சொல்கிறான் |
| भष् | भषति | குரைக்கிறது |
| भ्रम् | भ्रमति | சுற்றுகிறான் |

| | | |
|---|---|---|
| मन्थ् | मन्थति | கடைகிறான் |
| मील् | मीलति | கண் மூடுகிறான் |
| मूर्च्छ | मूर्च्छति | மயக்கமுறுகிறான் |
| रक्ष् | रक्षति | காப்பாற்றுகிறான் |
| रट् | रटति | சப்தமிடுகிறான் |
| रिंग् | रिङ्गति | தவழ்கிறான் |
| लिंग् | लिंगति | அணைக்கிறான் |
| वद् | वदति | சொல்கிறான் |
| वम् | वमति | கக்குகிறான் |
| वस् | वसति | வசிக்கிறான் |
| वांछ | वांछति | விரும்புகிறான் |
| शंस् | शंसति | புகழ்கிறான் |
| ष्ठीव | ष्ठीवति | துப்புகிறான் |
| स्कन्द् | स्कन्दति | ஒழுகுகிறது |
| हस् | हसति | சிரிக்கிறான் |
| हिक्क | हिक्कति | விக்குகிறான் |
| ह्रस् | ह्रसति | குறைகிறது |

## 2. மாறுதலடையும் தாதுக்கள்

| | | | |
|---|---|---|---|
| १. | [क्षि-क्षय्] | क्षयति | தேய்கிறான் |
| | [जि-जय] | जयति | வெல்கிறான் |
| | [तृ-तर] | तरति | தாண்டுகிறான் |
| | [द्रु-द्रव्] | द्रवति | உருகுகிறான் |
| | [धृ-धर] | धरति | தாங்குகிறான் |
| | [धे-धय्] | धयति | குடிக்கிறான் |

| | | |
|---|---|---|
| [नी-नय्] | नयति | கொண்டு போகிறான் |
| [भू-भव्] | भवति | இருக்கிறான், ஆகிறான் |
| [भृ-भर] | भरति | சுமக்கிறான் |
| [स्मृ-स्मर] | स्मरति | நினைக்கிறான் |
| [हृ-हर] | हरति | கவர்கிறான் |
| [ह्वे-ह्वय्] | ह्वयति | கூப்பிடுகிறான் |

தாதுக்களின் இறுதியிலுள்ள इ उ ऋ ऌ என்ற எழுத்துக்கள் ए ओ अर् अल् என்று மாறுகின்றன. உதாரணம் नी = ने, भू = भो, जि = जे, द्रु = द्रो. இவை अ என்ற இடைநிலையுடன் சேரும்போது ए, अय् என்றும், ओ, अव् என்றும் மாறிவிடுகின்றன. எனவே, भू = भव्, जि = जय् என்று ஆகின்றன. இவை இரு பகுதிகளாக மேலே குறிப்பிடப்பட்டுள்ளன. எனவே, இவை விதிக்குட்பட்டவை.

| | | | |
|---|---|---|---|
| २. | ग्लै-ग्लाय् | ग्लायति | சோர்வடைகிறான் |
| | ध्यै-ध्याय् | ध्यायति | தியானிக்கிறான் |
| | म्लै-म्लाय् | म्लायति | வாடுகிறான் |

தாதுவின் இறுதியிலுள்ள ऐ औ என்ற எழுத்துக்கள் आय् आव् என்று மாறுகின்றன. औ வுக்கு உதாரணம் தரப்படவில்லை. இவையும் விதிக்குட்பட்டவையே.

| | | | |
|---|---|---|---|
| ३. | क्रुश्-क्रोश | क्रोशति | உரக்க சப்தமிடுகிறான் |
| | शुच-शोच | शोचति | வருந்துகிறான் |
| | सिद्-सेध् | (नि) षेधति | தடுக்கிறான் |

தாதுவின் கடைசி எழுத்துக்கு முன் உள்ள इ उ ऋ ऌ (குறில் மட்டும்) முறையே ए ओ अर् अल् என்று

மாறுதலடையும். எனவே, श् च् ध् என்ற எழுத்துக்களின் முன் உள்ள इ उ என்ற எழுத்துக்கள் ए ओ என்று மாறியிருக்கின்றன.

குறிப்பு: सिध् என்ற தாதுவுடன் नि என்ற உபஸர்க்கம் (Preposition) சேர்க்கப்பட்டுள்ளது.

## 3. சம்பந்தமில்லாமல் மாறுதலடையும் தாதுக்கள்

| | | |
|---|---|---|
| पा-पिब् | पिबति | குடிக்கிறான் |
| घ्रा-जिघ्र | जिघ्रति | முகர்கிறான் |
| ध्मा-धम् | धमति | ஊதுகிறான் |
| म्ना-मन् | मनति | கற்கிறான் |
| दृश्-पश्य | पश्यति | பார்க்கிறான் |
| दा-यच्छ | यच्छति | கொடுக்கிறான் |
| स्था-तिष्ठ | तिष्ठति | நிற்கிறான் |
| गमं-गच्छ | गच्छति | போகிறான் |
| गुप्-गोपाय | गोपायति | காப்பாற்றுகிறான் |
| यम्-यच्छ | यच्छति | அடக்குகிறான் |

இவ்வுதாரணங்களில் தாதுவின் பகுதிக்கும் மாறுபட்ட பகுதிக்கும் விதிமுறை அமைக்க முடியவில்லை. எனவே இவை irregular சம்பந்தமில்லாமல் மாறுதலடைபவை.

4-வது விகரணம் (य) பரஸ்மைபதம் (a) சாதாரண தாதுக்கள்

| | | |
|---|---|---|
| अस् | अस्यति | எறிகிறான் |
| कुप् | कुप्यति | கோபிக்கிறான் |
| क्रुध् | क्रुध्यति | கோபிக்கிறான் |
| तुष | तुष्यति | மகிழ்கிறான் |
| तृप् | तृप्यति | திருப்தியடைகிறான் |

| | | |
|---|---|---|
| त्रस् | त्रस्यति | பயப்படுகிறான் |
| दीव् | दीव्यति | விளையாடுகிறான் |
| दुष् | दुष्यति | கெடுகிறான் |
| नश् | नश्यति | அழிகிறான் |
| नृत् | नृत्यति | நர்தனம் செய்கிறான் |
| पुष् | पुष्यति | கொழுக்கிறான் |
| पुष्प् | पुष्प्यति | பூக்கிறது |
| मुह् | मुह्यति | மயங்குகிறான் |
| मृष् | मृष्यति | பொறுக்கிறான் |
| शाम् | शाम्यति | தணிகிறான் |
| शुष् | शुष्यति | உலர்கிறான் |
| श्लिष् | श्लिष्यति | அணைக்கிறான் |
| सिध् | सिध्यति | நிறைபெறுகிறது |
| सीव | सीव्यति | தைக்கிறான் |
| स्निह | स्निह्यति | நேசிக்கிறான் |

6-வது விகரணம் (अ) பரஸ்மைபதம் (a) சாதாரண தாதுக்கள்

| | | |
|---|---|---|
| क्षिप् | क्षिपति | எறிகிறான் |
| तुद् | तुदति | தூண்டுகிறான் |
| दिश | दिशति | கொடுக்கிறான் |
| मिल | मिलति | விடுகிறான் |
| मुच् मुञ्च | मुञ्चति | சந்திக்கிறான் |
| लिख् | लिखति | எழுதுகிறான் |
| लिप्-लिंप् | लिंपति | பூசுகிறான் |
| स्पृश | स्पृशति | தொடுகிறான் |

| | | |
|---|---|---|
| स्फुट | स्फुटति | வெடிக்கிறான் |
| विश | विशति | நுழைகிறான் |

குறிப்பு: 1-6 விகரணங்களின் அடையாளம் अ. ஆனாலும் நுட்பமான வித்தியாசங்கள் உண்டு என்று முன்பு முன்னுரையில் குறிப்பிட்டோம். முன் பாடத்தில் Regular Roots மூன்றாவது வகையைக் கவனிக்கவும். தாதுவின் கடைசி எழுத்துக்கு முன் உள்ள इ उ ऌ எழுத்துக்கள் अ என்ற இடைநிலையுடன் சேரும்போது முறையே ए ओ अर् अल् என்று மாறும் என்று பொதுவிதி கண்டோம். இந்த விகரணத்தில் அவ்வாறு மாறுதல் ஏற்படவில்லை என்பதை क्षिपति போன்ற எல்லா உதாரணங்களிலும் காணலாம். 1-6 விகரணங்களுக்கிடையே உள்ள வேறுபாடுகளில் இது ஒரு முக்கியமான அம்சம்.

## 3. சம்பந்தமில்லாமல் மாறுதலடையும் தாதுக்கள்

| | | |
|---|---|---|
| इष्-इच्छ | इच्छति | விரும்புகிறான் |
| सद्-सीद् | सीदति | துன்புறுகிறான் |

10வது விகரணம்। (अय) பரஸ்மைபதம் (a) சாதாரண தாதுக்கள்

| | | |
|---|---|---|
| अर्च | अर्चयति | அர்ச்சனை செய்கிறான் |
| अर्द् | अर्दयति | துன்புறுத்துகிறான் |
| अर्ह | अर्हयति | மதிக்கிறான் |
| कथ् | कथयति | சொல்கிறான் |
| क्षल्-क्षाल् | क्षालयति | அலம்புகிறான் |
| खण्ड् | खण्डयति | துண்டிக்கிறான் |
| गण् | गणयति | எண்ணுகிறான் |
| चित्र | चित्रयति | சித்தரிக்கிறான் |
| चिन्त् | चिन्तयति | சிந்திக்கிறான் |

| | | |
|---|---|---|
| चूर्ण् | चूर्णयति | தூளாக்குகிறான் |
| तर्ज् | तर्जयति | அதட்டுகிறான் |
| तर्प | तर्पयति | திருப்தி செய்கிறான் |
| तल्-ताल् | तालयति | தாளமிடுகிறான் |
| दुःख | दुःखयति | துன்பம் தருகிறான் |
| पाल् | पालयति | காப்பாற்றுகிறான் |
| पूज् | पूजयति | பூஜிக்கிறான் |
| पूर | पूरयति | நிரப்புகிறான் |
| प्रथ् | प्रथयति | விளம்பரப்படுத்துகிறான் |
| प्रीण् | प्रीणयति | திருப்திப்படுத்துகிறான் |
| भक्ष | भक्षयति | சாப்பிடுகிறான் |
| भूष् | भूषयति | அலங்கரிக்கிறான் |
| मान | मानयति | கௌரவிக்கிறான் |
| रच् | रचयति | அமைக்கிறான் |
| रूप् | रूपयति | ரூபிக்கிறான் |
| वर्ण् | वर्णयति | வர்ணிக்கிறான் |
| सभाज् | सभाजयति | பெருமைப்படுத்துகிறான் |
| सांत्व | सांत्वयति | சமாதானப்படுத்துகிறான் |
| सुख | सुखयति | சுகப்படுத்துகிறான். |

(b) மாறுதலடையும் தாதுக்கள்

| | | |
|---|---|---|
| घुष्-घोष् | घोपयति | பறைசாற்றுகிறான் |
| चुद-चोद | चोदयति | தூண்டுகிறான் |
| चुर-चोर | चोरयति | திருடுகிறான் |
| तुल्-तोल् | तोलयति | நிறுக்கிறான், எடைபோடுகிறான் |

| | | |
|---|---|---|
| पुष्-पोष् | पोषयति | வளர்க்கிறான் |
| मृष-मर्ष | मर्षयति | பொறுக்கிறான் |

## चतुर्विंशः पाठः — பாடம் 24

இந்தப் பாடம் ஒரு சம்பாஷணை. இதன் தமிழாக்கம் தரப்பெறவில்லை. ஆங்காங்குள்ள கடினப் பதங்களின் பொருள், இலக்கணக் குறிப்புகள் தரப்பட்டுள்ளன. மிக எளிதான ஸம்பாஷணையாதலால் நீங்களே இதைத் தமிழாக்கித் தரவும்.

(अरविन्दः प्रकाशश्च कुमारीक्षेत्रं गच्छतः)

अरविन्दः: वयस्य! त्वया सहेयं उल्लासयात्रा मां प्रहर्षयति।

प्रकाशः: सत्यमरविन्द! ममापीयं यात्रा मोदाय भवति।

अरविन्दः: पश्य! चन्द्रः अस्तं गच्छति। कियत् रमणीयं दृश्यम्!

प्रकाशः: भारतभूमेः दक्षिणपीठभूमिः त्रिकोणाकारा। सा विन्ध्यपर्वतं यावत् विस्तृता। तस्या इदं दक्षिणं कोणाग्रम्। अत्रस्थाः ईदृशं दृश्यं तदा तदा पश्यन्ति।

अरविन्दः: किं प्रतिदिनं न पश्येयुः?

प्रकाशः: न। अद्य शुक्लचतुर्दशी। प्रातःकालः। सूर्यः नाद्यापि उदितः। चन्द्रः अस्तं गच्छति। श्वः पूर्णिमा। प्रातः काले सूर्यस्य उदयः, चन्द्रस्यास्तमयः च युगपत् भवेताम्।

अरविन्दः: एवं वा? किं सायङ्काले एतादृशं द्रष्टुं न शक्यम्?

प्रकाशः तदा द्रष्टुं शक्यमेव। श्वः सायङ्काले, पूर्णिमायाः सायं काले सूर्यस्यास्तमयः चन्द्रस्योदयश्च एककाले भवेताम्।

अरविन्दः एकः उदेति। अपरः अस्तमेति। आश्चर्यम्।

प्रकाशः तत्र तत्त्वमस्ति।

अरविन्दः किं तत् तत्त्वम्?

प्रकाशः लोकः कदाचित् सुखं कदाचित् दुःखं च अनुभवेदेव।

अरविन्दः कुतः दुःखमेव नानुभवति? कुतः सुखमेव नानुभवति?

प्रकाशः सुखं दुःखं च सुकृतदुष्कृतयोः फलम्।

अरविन्दः सुकृतं नाम किम्? दुष्कृतं नाम किम्?

प्रकाशः अस्माकं समीचीनं न्याय्यं कर्म सुकृतम्। असमीचीनं अन्याय्यं कर्म दुष्कृतम्।

अरविन्दः सुकृतं कालान्तरे सुखं यच्छति, भुक्तं पथ्यं अन्नमिव। दुष्कृतं दुःखं यच्छति। भुक्तं अपथ्यं अन्नं इव। एवं वा?

प्रकाशः एवमेव। तस्य कालस्य दशेति नाम।

अरविन्दः चन्द्रसूर्ययोरपि दशा भवति वा? तौ देवौ किल?

प्रकाशः भवतीव। वस्तुतः तयोः नोदयः। नास्तमयः।

अरविन्दः: अवगच्छामि। वयं तथा पश्यामः।

प्रकाशः: एवं एतत्। अस्तमयो नाम व्यसनं — दुःखं नाशः। उदयो नाम अभिवृद्धिः। तत्र पश्य...

अरविन्दः: अतीव तुष्यामि तव विवरणेन। कथय।

प्रकाशः: चन्द्रः ओषधीनां पतिः। राजा। तथापि सः नश्यति। आत्मानं रक्षितुं न प्रभवति। अस्तं गच्छति।

अरविन्दः: विचित्रं एतत्। साधनं अस्ति। फलं न भवति।

प्रकाशः: अरविन्द! तत्र पश्य। सूर्यः उदेष्यति। अरुणः उदितः।

अरविन्दः: अरुणः कः ?

प्रकाशः: सूर्यस्य सारथिः। स सूर्यस्य रथं चारयति।

अरविन्दः: सूर्यस्य रथः अस्ति वा ?

प्रकाशः: तथा काचित् कल्पना। अस्तु। अरुणः सूर्यस्य सारथिः। सः न समर्थः।

अरविन्दः: कथं सारथिः न समर्थः?

प्रकाशः: तस्य ऊरोः अधोभागः न सम्पन्नः। कट्याः अधोभागः न सम्पन्नः ।

अरविन्दः: कथमेतत् ?

प्रकाशः तदन्यदा कथयामि। सूर्यः तं सारथिं कृत्वा उदेति। वर्धते। प्रकाशते।

अरविन्दः एतदपि विचित्रम्। साधनं नास्ति। फलमस्ति।

प्रकाशः सम्यगवगच्छसि।

अरविन्दः किं तत्र तत्त्वम्?

प्रकाशः साधनसंपन्नः अहं इति न दृप्येत्। विनिपातो भवेदपि। साधनहीनः अहमिति न खिद्येत्। उदये भवेन्नाम।

अरविन्दः साधु वयस्य! अतीव साधु!

*கடின பதங்கள்:* [कुमारीक्षेत्रं - *கன்னியாகுமரி;* उल्लासयात्रा - *உல்லாசப் பயணம்;* प्रहर्षयति - *மகிழ்விக்கிறது;* दृश्यं - *காட்சி;* अस्तं - *மறைவு;* त्रिकोणाकारा - *முக்கோண வடிவமுள்ளது;* कोणाग्रं - *கோணத்தின் முனை;* अत्रस्थाः - *இங்குள்ளவர்கள்;* ईदृशं - *இதுபோன்ற;* युगपत् - *சேர்ந்தாற்போல், ஒரே சமயத்தில்;* शक्यं - *முடியும்;* न शक्यं - *முடியாது;* शक्यमेव - *முடியுமே! கட்டாயம் முடியும்;* उदयः - *தோற்றம்;* अस्तमयः - *மறைவு;* लोकः - *உலகம், மனிதன்;* सुकृतदुष्कृतयोः - *புண்ய பாபங்களுடைய;* सुकृतं - *புண்யம்;* दुष्कृतं - *பாபம்;* नाम - *என்றால் (என்றால் என்று இங்கு பொருள். பெயர் என்ற பொருளும் உண்டு);* समीचीनं - *சரியான, நேர்மையான;* असमीचीनं - *சரியில்லாத, நேர்மையற்ற;* समीचीन*த்தின் எதிர்மறை;* न्याय्यं - *நீதியோடொத்த;* अन्याय्यं - *நீதியோடொவ்வாத;* न्याय्य*த்தின் எதிர்மறை;* भुक्तं - *சாப்பிடப்பட்ட;* अन्नं - *உணவு;* पथ्यं - *முறையுடன் அமைந்த,*

ஹிதமான; अपथ्यं - पथ्यத்தின் எதிர்மறை; कालान्तरे - வேறு ஒரு பொழுதில், வினைகள் பயன் தரும் நேரம்; व्यसनं - கஷ்டம்; नाशः - அழிவு; अवगच्छामि - அறிகிறேன் (புரிகிறது) எனப் பொருள்; अतीव - மிகவும்; विवरणेन - விரிவுரையால்; ओषधीनां - பயிர்களின்; नश्यति - அழிகிறான்; आत्मानं - தன்னை; रक्षितुं - காப்பாற்றிக் கொள்ள; प्रभवति - சக்தியுள்ளவனாகிறான்; முடிகிறது எனப் பொருள்; न प्रभवति - சக்தி உள்ளவனாக ஆகிறதில்லை (முடிகிறதில்லை); साधनं - பணி நிறைவேற உதவும் பொருள்; फलं - பயன்; उदेष्यति - உதிக்க (தோன்ற)ப் போகிறான்; उदितः - உதித்து (தோன்றி) விட்டான்; चारयति - ஓட்டுகிறான்; समर्थः - திறமையுள்ளவன்; सारथिः - தேரோட்டி; ऊरोः - தொடையினுடைய; ऊरुः - தொடை; अधोभागः - கீழ்ப்பகுதி; संपन्नः - உருவம் பெற்றது, நிறைவுற்றது, சமைந்தது; कट्याः - இடுப்பினுடைய; कटिः-कटी - இடுப்பு; अन्यदा - வேறொரு சமயம்; वर्धते - வளர்கிறான்; सम्यक् - நன்கு; साधनसंपन्नः - வசதி நிறைந்தவன்; साधनहीनः - வசதி குறைந்தவன்; न दृष्येत् - கர்வம் கொள்ளேல்; विनिपातः - வீழ்ச்சி; न खिद्येत् - வருந்தேல்; भवेन्नाम - ஏற்படலாமே! साधु - நல்லது! वयस्य - தோழனே!

**இலக்கணக் குறிப்புகள்:** कथं + एतत् = कथमेतत् । तत् + अन्यदा = तदन्यदा। एतत् + अपि = एतदपि। न + अस्ति = नास्ति। फलं + अस्ति = फलमस्ति। सम्यक् = अवगच्छसि = सायगवगच्छसि। विनिपातः + भवेत् + अपि = विनिपातो भवेदपि। अहं + इति = अहमिति। भवेत् + नाम = भवेन्नाम।

# पञ्चविंशः पाठः — பாடம் 25

उपाध्यायः पाठं अबोधयत्। मध्ये मध्ये प्रश्नान् अपृच्छत्। माणवकाः उत्तरं अवदन्। तेषु एकः रामकृष्णः। सः अतीव बुद्धिमान्। सः गवाक्षसमीपे उपाविशत्। तस्य शिरः मुहुः मेजिकां अस्पृशत्। सः अस्वपत्।

उपाध्यायः : रामकृष्ण! कुतो निद्रासि?

रामकृष्णः : आर्य! प्रसीद! मम द्वे प्रेयस्यौ । तत्र....

उपाध्यायः : त्वं बालः । कथं द्वे प्रेयस्यौ ?

रामकृष्णः : न अनृतं वदामि ।

उपाध्यायः : अस्तु । ज्यायसी कदा समागता?

रामकृष्णः : यदा अहं जातः तदैव ।

उपाध्यायः : कनीयसी कदा समागता ?

रामकृष्णः : द्वित्रेभ्यः वर्षेभ्यः पूर्वम् ।

उपाध्यायः : किं मातापितरौ जानीतः?

रामकृष्णः : जानीतः ।

उपाध्यायः : पाठवेलायां कुतः निद्रासि?

रामकृष्णः : कनीयस्यां अतीव अभिलाषः । एको मासः गतः । तया सहैव अस्मि । तेन...

(बालाः हसन्ति)

रामकृष्णः : मा हसत वयस्याः मा हसत ।

उपाध्यायः : मा हसत । रामकृष्णः सर्वं कथयतु । रामकृष्ण! तेन....

रामकृष्णः : तेन ज्यायसी कुपिता । सा एकं उपायं अकरोत् ।

उपाध्यायः : कः उपायः ?

रामकृष्णः : तस्याः बालसखी काचित् । सा सखी मुहुः मां उपागच्छत् ।

उपाध्यायः : सा किं अकरोत् ?

रामकृष्णः : सा मां अनुनयति स्म । तं अवसरं उपलभ्य ज्यायसी मम समीपं आगता । अत्रापि अनुगच्छति ।

उपाध्यायः : अत्रापि वा? न हि पश्यामः ।

रामकृष्णः : सा अत्रैव अस्ति । मम चेतः हरति । सकलानां इन्द्रियाणां इष्टा भवति । तां प्रसादयितुं शिरसा नमामि । न निद्रामि ।

उपाध्यायः : रामकृष्ण ! का ज्यायसी ? का वा कनीयसी? का सखी? किं प्रहेलिकां रचयसि?

रामकृष्णः : आर्य ! निद्रा मम प्रथमा प्रेयसी । सा मम जन्मनः प्रेयसी ।

उपाध्यायः : द्वितीया का ?

रामकृष्णः : सा विद्या । द्वित्रेभ्यः वर्षेभ्यः तस्यां अतीव प्रणयः मम । निद्रायां अनादरश्च।

उपाध्यायः : अस्तु का सा निद्रायाः प्रियसखी ?

रामकृष्णः : तन्द्री । सा मां अन्वनयत् । तां अनुसरन्ती निद्रापि मां उपगच्छति । किं करोमि?

उपाध्यायः : साधु रामकृष्ण? साधु । परीक्षायां विजयी भव । [सर्वे बालकाः विस्मिताः]

विद्याभिलाष-कुपितां निजबालसख्या
तन्द्र्या कथञ्चिदनुनीय समीपयाताम् ।
चेतोहरां प्रणयिनीं सकलेन्द्रियेष्टाम्
निद्रां प्रसादयितुं एष नमस्करोमि ॥

**विद्याभिलाष कुपितां** *கல்வியிலுள்ள நாட்டத்தால் கோபமடைந்தவளும்* **निजबालसख्या तन्द्र्या** *தனது இளமைத் தோழியான சோம்பலின் உதவியால்* **कथञ्चित् अनुनीय** *எப்படியோ (என்னை) சமாதானப்படுத்தி* **समीपयातां** *அருகில் வந்தவளும்* **सकलेन्द्रियेष्टां** *எல்லாப்புலன்களுக்கும் இஷ்டமானவளுமான* **प्रणयिनीं निद्रां** *பிரியமான தூக்கத்தை* **प्रसादयितुं** *ஸமாதானம் செய்ய* **एषः नमस्करोमि** *இந்த (நான்) வணங்குகிறேன்.*

**मध्ये मध्ये** *இடை இடையே*
**गवाक्षं, वातायनं** *ஜன்னல்*
**निद्रासि** *தூங்குகிறாய்*
**प्रेयसी** *காதலி*
**ज्यायसी** *மூத்தவள்*
**अभिलाषः** *விருப்பம்*
**अनुनयति** *சமாதானம் செய்தாள்*
**उपलभ्य** *பெற்று*
**प्रसादयितुं** *சந்தோஷப்படுத்த*
**प्रणयः** *அன்பு*
**वयस्यः** *தோழன்*

**प्रश्नः** *கேள்வி*
**मेजिका** *மேஜை*
**प्रसीदत** *தயவு செய்யுங்கள்*
**अनृतं** *பொய்*
**जानीतः** *அறிகிறார்கள்*
**उपागच्छत्** *அணுகினாள்*
**अवसरः** *சந்தர்ப்பம்*
**सकलानां** *எல்லா*
**प्रहेलिका** *புதிர்*
**तन्द्री** *சோம்பல், அயர்வு*

———★———

# सूक्तिसुधा-அமுதப் பொன்மொழிகள்

नागुणी गुणिनं वेत्ति गुणी गुणिषु मत्सरी ।
गुणी च गुणरागी च विरलः सरलो जनः ॥

குணவானை குணமற்றவன் புரிந்துகொள்ளமாட்டான். குணவானுயுமிருந்து பிறரது குணத்தில் பற்றுமுள்ள ஸரளமான மனிதன் காண்பதற்கரியவன்.

मुखेन नोद्गिरत्यूर्ध्वं हृदयेन नयत्यधः ।
जरयत्यन्तरे साधुर्दोषं विषमिवेश्वरः ॥

நல்லவன் பிறரது குறைகள் வாயால் மேலே கொணர மாட்டான். கீழே இதயத்தில் கொணரவும் மாட்டான். பரமேசுவரன் விஷத்தைத் அடக்கியதைப்போல் இதயத்திற்கும் வாய்க்கும், இடையே ஜீர்ணமாகும்படி செய்வான்.

सद्भिस्तु लीलया प्रोक्तं शिलालिखितमक्षरम् ।
असद्भिः शपथेनापि जले लिखितमक्षरम् ॥

நல்லவன் விளையாட்டாகச் சொன்ன எழுத்து கூட சிலையில் வடித்த எழுத்தாகும். (நிலைத்து நிற்கும்). நல்லோரல்லாதவர் சபதம் செய்து சொன்னது நீர்மேல் எழுத்தாகும். (சொல்லும்போதே மறையும்)

संपत्सु महतां चित्तं भवति उत्पलकोमलम् ।
आपत्सु च महाशैलशिलासंघातकर्कशम् ॥

செழிக்கின்ற நிலைகளில் நல்லவர்களின் மனம் அல்லிப்பூ போன்று மென்மையுடன் இருக்கும். நெருக்கடி நிலையில் பெருமலையின் பாறைபோன்று இறுக்கமும் சரசுரப்பும் பெறும்.

## षड्विंशः पाठः பாடம் 26

### दैनन्दिनं कर्म அன்றாடச் செயல்கள்

उषसि निद्रां जहाति - (त्यजति)

*விடியற்காலையில் தூக்கத்தை விடுகிறான்*

ब्राह्मे मुहूर्ते जागर्ति। (उद्बुध्यते)

*பிராம்மவேளையில் (விடியற்காலையில்) விழித்துக் கொள்கிறான்.*

ततः शयनात् उत्तिष्ठति।

*அதன்பின் படுக்கையிலிருந்து எழுந்துகொள்கிறான்*

शौचागारे शौचं करोति। (मलं मूत्रं च विसृजति)

*சுத்தி அறையில் (கழிப்பறையில்) மலசுத்தி செய்து கொள்கிறான் (மலத்தையும் சிறுநீரையும் கழிக்கிறான்)*

आस्यं जलेन पूरयित्वा गण्डूषं करोति।

*வாயை நீரால் நிரப்பிக் கொப்புளிக்கிறான்*

दन्तचूर्णेन, दन्तलेपिन्या वा दन्तान् धावति। (दन्तधावनं करोति)

*பற்பொடியால் அல்லது பற்பசையால் பற்களை (த்தேய்த்து) சுத்தம் செய்கிறான்*

दन्तघर्षण्या दन्तकूर्चेन वा दन्तानां अन्तरालं शोधयति।

*பல்பிரஷால் அல்லது பற்குச்சியால் பற்களின் இடைவெளியைச் சுத்தப்படுத்துகிறான்.*

जिह्वां जिह्वालेखिन्या मार्जयति।

*நாக்கை நாக்குவழிப்பானல் வழிக்கிறான் (துடைக்கிறான்)*

आस्यं गण्डूषेण विशोधयति।

*வாயை நீர்க்கொப்புளித்தலால் சுத்தமாகச் செய்கிறான்.*

प्रातः शरीरस्थितिमनुसृत्य उचितं व्यायामं करोति।

*காலையில் உடல் நிலையையொட்டி தக்கபடி தேகப்பயிற்சியைச் செய்கிறான்.*

ततः शिरः पादौ च तैलेन लेपयति। ततः स्नाति।
(शिरसि पादयोश्च तैललेपं करोति, स्नानं करोति।)

*தலையையும் கால்களையும் எண்ணெய்யால் பூசுகிறான். அதன்பின் குளிக்கிறான். (தலையிலும் கால்களிலும் எண்ணெய் பூச்சைச் செய்கிறான். ஸ்நானத்தைச் செய்கிறான்)*

उष्णेन अंबुना स्नानं शरीरे व्यथां अपाकरोति।

*சுடுதண்ணீரால் ஸ்நானம் உடலில் வலியை அகற்றுகிறது.*

शीतेन उदकेन स्नानं क्षुधां दीपयति। ऊर्जां बलं च ददाति। तन्द्रां दाहं च अपनयति।

*குளிர்ந்த நீரால் குளிப்பது பசியைத் தூண்டுகிறது. உற்சாகத்தையும் வலிவையும் தருகிறது. சோம்பலையும் எரிச்சலையும் அகற்றுகிறது.*

शुद्धेन शुष्केण वस्त्रखण्डेन गात्रं शोषयति। (गात्रस्य आर्द्रतां अपनयति)

*சுத்தமான காய்ந்த துணித்துண்டால் உடலைக்காயவைக்கிறான். (உடலின் ஈரத்தைப் போக்கிக்கொள்கிறான்)*

प्रथमं धौतं अर्धोरुकं चण्डातकं वा धारयति।

*முதலில் தோய்க்கப்பெற்ற அரைச்சராயையோ ஜட்டியையோ போட்டுக்கொள்கிறான்.*

ततः धौतं अधोवासः धत्ते।

*அதன் பிறகு கீழாடையை உடுத்திக்கொள்கிறான்*

उपरि उत्तरीयं कञ्चुकं वा परिधत्ते।

*மேல் மேலாடையையோ சட்டையோ சுற்றி உடுத்திக் கொள்கிறான்.*

ततः पूर्वं धृतं वस्त्रं (वस्त्राणि) जले क्षालयति, शोधयित्वा शोषयति च।

*அதன்பின் முன்னர் உடுத்திய ஆடையை (ஆடைகளை) நீரில் அலசுகிறான், மற்றும் சுத்தமாக்கி உலர்த்துகிறான்.*

ललाटे भस्मलेपं तिलकं वा धारयति।

நெற்றியில் விபூதிப்பூச்சையோ திலகத்தையோ இட்டுக் கொள்கிறான்.

यदि माणवकः, पठनाय प्रवर्तते।

மாணவனானால் படிக்கத் துவங்குகிறான்.

यदि कुत्रापि सेवावृत्तौ वाणिज्ये वा नियुक्तः, तदर्थानि साधनानि सज्जीकरोति।

எங்காவது பணியாற்றலில் அல்லது வணிகத்தில் நியமிக்கப்பட்டிருந்தால் அதற்கான ஸாதனங்களை ஆயத்தம் செய்துகொள்கிறான்.

भ्राता पित्रा भगिन्या तस्मिन् समये मिलितैः अन्यैश्च साकं प्रातराशं भुंक्ते।

சகோதரனுடன், தந்தையுடன், சகோதரியுடன் மற்றும் அந்த சமயத்தில் கூடிய மற்றவர்களுடன் சேர்ந்து காலையுணவைச் சாப்பிடுகிறான்.

उचितेन प्रसाधनेन अलंकृतः स्वस्वकार्याय बहिः गच्छति।

உரிய ஆடையணிகளால் அலங்கரித்துக்கொண்டவனாக தன் தன் பணியை முன்னிட்டு வெளியில் செல்கிறான்.

## सप्तविंशः पाठः - பாடம் 27

## वर्तमाने भूते च

### நிகழ்காலத்திலும் கடந்தகாலத்திலும்

பெரும்பாலும் நிகழ்காலத்தில் நூற்றுக்கணக்கான வினைச் சொற்களைப் பயன்படுத்திப் பல வாக்கியங்களை அமைத்தோம். நிகழ்காலத்தில் வந்துள்ள வினைச்சொற்களைக் கடந்தகாலத்தைக் கூறுவதாக மாற்றுவதற்கு 7-ம் பாடத்தை மறுபடி நினைவிற்கொள்வோம்.

| நிகழ்கால வினைவிகுதிகள் | | | கடந்தகால வினைவிகுதிகள் | | |
|---|---|---|---|---|---|
| ति | तः | अन्ति | त् | तां | अन् |
| सि | थः | थ | सु(ः) | तं | त |
| मि | वः | मः | अं | व | म |

உதாரணம்:

| நிகழ்காலம் | கடந்தகாலம் | நிகழ்காலம் | கடந்தகாலம் |
|---|---|---|---|
| लट् | लङ् | लट् | लङ् |
| भवति | अभवत् | चरति | अचरत् |
| भवतः | अभवतां | चरतः | अचरताम् |
| भवन्ति | अभवन् | चरन्ति | अचरन् |
| भवसि | अभवः | चरसि | अचरः |
| भवथः | अभवतं | चरथः | अचरतं |
| भवथ | अभवत | चरथ | अचरत |
| भवामि | अभवं | चरामि | अचरं |
| भवावः | अभवाव | चरावः | अचराव |
| भवामः | अभवाम | चरामः | अचराम |

ஸம்ஸ்கிருதஶ்ரீ பாடமாலா முதல்பாகம் 9-ம் பாடத்தில் தொடங்கிப் பல வினைச்சொற்கள் பழக்கத்தில் வந்துள்ளன. அவற்றில் சில உபஸர்க்கங்களுடன் சேர்ந்தவை. 2-ம் பாகம் பாடம் 14-ல் இவைபற்றிய குறிப்புகளைக் காணலாம். உபஸர்க்கங்களைச் சேர்த்து கடந்தகாலத்தைக் குறிப்பிடும்போது சிறிது கவனம் தேவை. प्र + हरति என்ற உபஸர்க்கத்துடன் காணும் வினைச்சொல் கடந்தகாலத்தைத் தழுவும்போது प्र + अहरत् என்றாகிஸந்தி சேர்ந்து प्राहरत् என்றாகிறது. अ + प्रहरत् = अप्रहरत् என்று வராது) இப்படி समहरत्, निरगच्छत्, अन्वभवत्, प्राणमत् என்றெல்லாம் வரும். இவற்றைத் தொடர்ந்து பயிற்சிகள் மூலம் பழக்கத்தில் கொணர்வோம். வினைச்சொற்களைக் கடந்தகாலத்தில் மாற்றிப் பார்ப்போம்.

अश्वः मन्दुरायां अस्ति। (आसीत्)
त्वं वस्त्राणि इच्छसि। (ऐच्छः)
अहं पठनं करोमि। (अकरवम्)
पुष्पाणि विकसन्ति। (व्यकसन् - वि-अकसन्)
यूयं फलानि खादथ। (अखादत)
ते उद्याने क्रीडन्ति। (अक्रीडन्)
रामः सीता च वनं गच्छतः। (अगच्छताम्)
यूयं गृहं आगच्छथ। (आगच्छत) (आ + अगच्छत)
वयं गृहात् निर्गच्छामः (निरगच्छाम) (निर् + अगच्छाम)
रामः गीतं गायति (अगायत्)
गजः वने तिष्ठति (अतिष्ठत्)
राजा चोरं दण्डयति (अदण्डयत्)
राघवः गुरुं नमति (अनमत्)
अहं धेनुं नयामि (अनयम्)
युवां अश्वं नयथः (अनयतम्)
यूयं बालान् गृहं आनयथ (आनयत) (आ + अनयत)
माता अन्नं पचति (अपचत्)
युवां पाठं पठथः (अपठतम्)
सः गिरेः पतति (अपतत्)
अहं दूरे रामं पश्यामि (अपश्यम्)
त्वं क्षीरं पिबसि (अपिबः)
रामः धेनुं पोषयति (अपोषयत्)
शिष्यः गुरुं पृच्छति (अपृच्छत्)
युवां पाठं बोधयथः (अबोधयतम्)
गुरुः प्रीतः भवति (अभवत्)
राजा धनं यच्छति (अयच्छत्)

त्वं पाठं लिखसि (अलिखः)
अहं सत्यं वदामि (अवदम्)
युवां कुत्र वसथः (अवसतम्)
सा गृहं विशति (अविशत्)
यूयं अत्र उपविशथ (उपाविशत) (उप + अविशत)
वयं हसामः (अहसाम)

## अष्टाविंशः पाठः - பாடம் 28

## विशेषणवाचिनः विशेष्यवाचिनश्च शब्दाः

### விசேஷணங்களும் விசேஷ்யங்களும்

*பாடம் 8ல் இவைபற்றிய குறிப்புகள் உள்ளன. நிறம், குணம், சிறப்பு, எண்ணிக்கை போன்றவை பெயர்ச்சொற்களை விளக்குகின்றன. மனிதன், அழகிய மனிதன் அறிவாளியான மனிதன். வயதான மனிதன் செவிடான மனிதன் என்பன போன்று ஒவ்வொன்றையும் பல விசேஷணங்களின் மூலம் தெளிவுபடுத்துகிறோம். சிறப்பிக்கப் பெறுவதானது விசேஷ்யம் என்றும் சிறப்புடனிருப்பதைக் குறிப்பிடுவது விசேஷணம் என்றும் சொல்லப்படும்.*

*விசேஷ்யமான பெயர்ச்சொல் எந்த லிங்கத்தில் எந்த விபக்தி வசனங்களில் வருகிறதோ அந்த லிங்கத்திலேயே அதே விபக்தி வசனங்களுடன் விசேஷணமும் வரும்.*

விசேஷண விசேஷ்யங்கள் அமைந்த சில சொல்வழக்குகள்.

उन्नतं गिरिं आरोहामि।

शीतलेन जलेन स्नानं अकरवम्।

उष्णाय पानीयाय स्पृहये।

निपुणात् आचार्यात् विद्यां गृह्णामि।

मधुरायाः द्राक्षायाः रसं पिबामि।

शुभ्रं वस्त्रं धरामि।

रक्तेन उत्तरीयेण आत्मानं आवृणोति।

नीलं नभः सहस्रैः नक्षत्रैः शोभते।

विष्णुः पीतं वासः परिधत्ते।

हरितैः तृणैः भूमिः पूर्णा।

वायुः सूक्ष्मं रजः अन्यत्र नयति।

गजस्य शरीरं स्थूलम्।

सीतायाः वियोगेन रामः कृशः जातः।

मम पिता वृद्धः, वृद्धया मात्रा सह नगरं गच्छति।

बालं सुतं बाला मे सुता गृहं नयति।

तस्य पत्नी आढ्या, पितुः गृहात् बहु धनं आनयत्।

तस्याः पिता धनिकः, तस्यै बहुमूल्यं यौतकं अयच्छत्।

सा धनिका अपि दरिद्रं भर्तारं अनुसरति।

सा सङ्गीते गणिते च निपुणा।

शूराः योधाः युद्धाय सन्नह्यन्ति।

शूरा सुभद्रा रथेन अर्जुनं हस्तिनापुरं अनयत्।

अस्त्रविद्यायां चतुरे अर्जुने तस्याः महती प्रीतिः अभवत्।

सर्वाभ्यः अधिकं तस्याः सौन्दर्यं अर्जुनस्य मनः अकर्षत्।

मथुरा पुराणा नगरी, द्वारका तु नवीना।

भर्तुः नवे सङ्गमे नारी मूका भवति।

भर्ता पंगुः बधिरः काणः अन्धः विग्रः वा भवतु, पत्नी तं श्रद्धया परिचरति।

पत्नी पंगुः बधिरा काणा अन्धा विग्रा यदि भवति, भर्ता अपि तस्यां प्रियं दर्शयति।

कश्चित् पत्नीं मधुरया वाचा मधुरेण इङ्गितेन च सभाजयति। कश्चित् परुषेण वाक्येन तां गर्हते।

काचित् स्वभावेन मृदुः भवति, काचित् कठिना। कठिनं तस्या

हृदयं, हिंस्रा चर्या, परं मृदु भाषणं भवति।
सिकतिलायां कठिनायां च भूमौ चिरं न तिष्ठ।
सुरभिः वायुः, सुरभेः लतायाः मृदूनि पुष्पाणि आनयति।
कार्यालये उत्तमाधिकारी दयालुः शान्तः। तादृशो नरः विरलः।
इदं शान्तं पूतं च गृहम्। पूति किमपि अत्र नास्ति।
पूर्णात् घटात् जलं आददाति।
अद्यत्वे तडागे वारि अल्पं एव दृश्यते।
रिक्तात् भाण्डात् दर्वी न किमपि आदत्ते।

आरोहामि ஏறுகிறேன் अकरवं செய்தேன் पानीयं குடி நீர் आत्मानं தன்னை आवृणोति மூடிக்கொள்கிறான் नभः ஆகாயம் (नपुं) वासः ஆடை परिधत्ते அணிந்து கொள்கிறார் रजः புழுதி தூசி बहुमूल्यं மிகவிலைமதிப்புள்ள यौतकं சீதனம் सन्नह्यन्ति தயாராகிறார்கள் अकर्षत् இழுத்தது परिचरति பணிவிடை செய்கிறான் सभाजयति பெருமைப் படுத்துகிறான் गर्हते நிந்திக்கிறான் चर्या நடத்தை उत्तमाधिकारी மேலாளர் भाण्डं பாண்டம், பானை दर्वी கரண்டி.

## ऊनविंशः पाठः – பாடம் 29

## एकः स्वादु न भुञ्जीत

एकः स्वादु न भुञ्जीत इति वृद्धाः वदन्ति। स्वादु वा? अस्वादु वा? इति भोजनकाले एव ज्ञायेत। अतः भोजनं प्राप्तकालं यदि भवेत्, तर्हि इष्टैः सहैव भोजनं कुर्वीत इति एतत् अनुशास्ति। काकाः तत्र मार्गं दर्शयन्ति।

किञ्चित् वनम्। द्वादश वत्सरान् यावत् अनावृष्टिः कदाचित् अभवत्। खाद्यं पक्षिणामपि मृग्यं अभवत्। अन्ते वृष्टिः दिष्ट्या जाता। क्षेत्राणि सस्यलानि। वृक्षाः पर्णफलवन्तः। सर्वत्र हरितं दृश्यम्। श्वेतवाहनः काकयूथपः अस्माकं परिचितः। वनोपान्ते कञ्चन वृक्षं सपरिवारः सः अध्यवसत्।

सस्यभूयिष्ठेष्वपि क्षेत्रेषु कृषकाः बहूनां वत्सराणां ईतिबाधया पूर्वं क्लिष्टाः एकमपि धान्यकणं भूमौ न अवाकिरन्। धान्यकणा अपि न लब्धाः काकैः। कुतः अन्नं लभ्येत?

परिवारः अन्नाय स्पृहयति इति जानन् श्वेतवाहनः किंकरान् दिशि दिशि प्रैरयत्। "गच्छत। सर्वतो भ्रमत। ग्रामं ग्रामं अटत। यत्र कचित् धान्यराशिः दृष्टश्चेत्, सद्यः परापतत। मह्यं निवेदयत। सर्वे वयं संभूय गत्वा धान्यानि खादेम। एकः न भुञ्जीत। अयं नियमः सर्वैः परिपाल्यः" इति आदिशत्।

सर्वे यथादिष्टं ग्रामे ग्रामे धान्यराशिं व्यचिन्वन्। तेषु कश्चित्काकः स्वार्थपरः। स एकाकी तत्र तत्र व्यचरत्। मार्गे पतितं धान्यकणं स्वयमेव अखादत्। यूथपाय न किमपि आवेदयत्। कुत्रचित् एकः शकटः धान्यमूतानि सम्राष्टानि वहन् मार्गे तेन दृष्टः। तं अनुपतन् सः ग्रामं विशन्तं तं अपश्यत्। मूतानि शकटात् अवरोपितानि। तदा किञ्चन मूतं शिथिलबन्धनं बभूव। तस्मात् धान्यानि बहिः मार्गे न्यपतन्। शकटचालकः तत् न अविदत्। मूतानि अवरोपितानि दृष्ट्वा सः शकटं ततः निरगमयत्। स्वार्थी काकः एतत् आत्मनः भाग्यं मेने। स यूथपाय एतत् न न्यवेदयत्।

"मह्यं एकस्मै एव सर्वं एतत्। यदि कश्चिदन्यः सयूथ्यः एतत्पश्येत्, यूथपाय निवेदयेत्। यथा अन्ये अत्र नागच्छेयुः, तथा विधेयं" इति निश्चित्य यूथपं उपागच्छत्।

"स्वामिन्! नेदीयसि ग्रामे धान्यागारः कश्चन आस्ते। तस्य द्वारे धान्यकणाः विकीर्णाः। यदा अहं तत्र अगच्छं, कृषकः लगुडेन मां ताडयितुं आरब्धवान्। स रात्रिन्दिवं जागरूकः पालयति तं अगारम्। विश्रमाय यदा गच्छति, तत्स्थाने कश्चन अन्यः तं अगारं पालयति।

काकविषमपि धूलिभिः मिश्रितं विकीर्णं इति जना वदन्ति। ततः तत्र न गन्तव्यं इति मे मतिः। श्रुत्वा देवः प्रमाणं'' इति सविनयं अवदत्। यूथपः तत् श्रुत्वा सर्वानपि तान् आदिशत्, तत्र न गन्तव्यं इति।

मुदितः एष स्वार्थी काकः गुप्तं यथा तथा स्वयं तत्र गत्वा यथेष्टं धान्यकणान् अखादत् विनैव कमपि उपरोधम्। अत्यशनात् अलसः शकटमार्गे एव सुप्तः, रात्रौ केनापि मन्दं मन्दं गच्छता शकटेन पेषितः अम्रियत।

अन्ये काकाः तं अनागतं वीक्ष्य तस्य अन्वेषणाय इतस्ततः अगच्छन्। पथि तं मृतं आलोक्य यूथपाय न्यवेदयन्। ''अहो बुभुक्षया विकलो वा सुप्तो वा? कदाचित् शकटागमनमेव एष न अजानाद् वा? यदि द्वित्राः गच्छेम, अन्योन्यं जागरणं सुकरं स्यात्। अयमेकाकी आगतः। अतः इतः परं एकाकी क्षुधितः न विचरेत्। आहारे दृष्टमात्र एव, सर्वान् स्वकीयान् का केति आह्वयेत्। ततः लब्धं यथायथं संभूय एव सर्वे खादेयुः। एकाकी न भुञ्जीयात्'' इति सर्वानादिशत् श्वेतवाहनः। ततः परं काकाः यदि आहारादिकं पश्येयुः, तर्हि काकेति सर्वान् आमन्त्रयेयुः। सर्वे यदा समवेताः, ततः खाद्यग्रहणाय भूमिं गच्छेयुः। ''एकः स्वादु न भुञ्जीत'' इत्येतदनुशासनं काकैः उक्तं इति वृद्धाः वदेयुः ॥

स्वादु *இனியது* ज्ञायेत *அறியப்படும்* भोजनं प्राप्तकालं यदि *சாப்பிடும் வேளை வந்துவிட்டால்* इष्टः *பிரியமான மனிதர்* अनुशास्ति *வலியுறுத்துகிறது* अनावृष्टिः *மழையின்மை* खाद्यं *உணவு* मृग्यं *தேடத்தக்கது* दिष्ट्या *எதிர்பாராமல், அதிருஷ்டவசமாக* सस्यलानि *பசுமையான பயிர் நிரம்பியவை* दृश्यं *காட்சி* हरितं *பச்சை பசுமையானது* परिचितः

அறிமுகமானது सस्यभूयिष्ठं பயிர் நிரம்பிய क्षेत्रं வயல் ईतिबाधा ஈதிபாதை, இயற்கையின் பாதிப்பு अवाकिरन् இறைத்தார்கள் प्रैरयत् அனுப்பினார் भ्रमत சுற்றுங்கள் परापतत திரும்ப ஓடிவாருங்கள் भुञ्जीत சாப்பிடுங்கள் परिपाल्यः கடைபிடிக்கத்தக்கது स्वार्थपरः தன் தேவையிலேயே குறியுள்ளவன் मूतं மூட்டை सप्ताष्टानि 7-8 अनुपतन् பின்தொடர்ந்து பறப்பதாக विशन्तं நுழைகின்றதாக अवरोपितं இறக்கப்பட்டது शिथिलबन्धनं கட்டுத்தளர்ந்ததாக शकटचालकः வண்டி ஓட்டுபவன் अविदत् உணர்ந்தான் निरगमयत् வெளிப்படுத்தினான் सयूथ्यः தன் கூட்டத்தைச் சார்ந்தவன் निश्चित्य தீர்மானித்து नेदीयसि மிக அருகிலுள்ள धान्यागारः தானியக்கிடங்கு लगुडं தடி जागरूकः விழித்திருப்பவன் विश्रमाय ஓய்வின் பொருட்டு काक(मारि)विषं காக்கையைக் கொல்லும் விஷம் धूलिः புழுதி विकीर्णं இறைக்கப்பட்டுள்ளது श्रुत्वा देवः प्रमाणं கேட்டபின் (மேல் நடவடிக்கைக்கு) எஜமானர் முடிவு செய்யட்டும் मुदितः அகமகிழ்ந்த गुप्तं यथातथा பிறர் அறியாத படி, ரஹஸ்யமாக उपरोधः தடை अत्यशनं அளவுக்கு மீறி அதிகமாக உண்பது अलसः சோம்பேறி सुप्तः தூங்கியதாக पेषितः தசுக்கப்பட்டதாக अम्रियत இறந்தது अन्वेषणं தேடுதல் बुभुक्षा பசி विकलः தளர்ந்ததாக अजानात् உணர்ந்தது द्वित्राः 2-3 பேராக जागरणं உஷார்படுத்துதல் सुकरं எளிதில் செய்யக் கூடியது क्षुधितः பசித்தவன் दृष्टमात्रे பார்த்தவுடன்.

## தொழிலாளியும் தொழிலும்

पलगण्डः, लेपकः வெள்ளை அடிப்பவர், பூச்சுபூசுபவர்

तुन्नवायः, सौचिकः தையல்காரர்

असिधावकः, शस्त्रमार्जः கத்திதீட்டுபவர், சாணைபிடிப்பவர்

धावनं தீட்டுதல்

पायना நெருப்பில் காய்ச்சியதை நீரில் அல்லது எண்ணெய்யில் சுருக்குக்கொடுத்தல்

देवाजीवः, देवलः, अर्चकः கோயில் பூசாரி
आपणिकः கடைக்காரன்
वणिक् வியாபாரி
विक्रयिकः விற்பவன், வியாபாரி
तक्षा, तक्षकः, वर्धकिः, काष्ठतट्, काष्ठतक्षः தச்சன்
तक्षणं தச்சுவேலை
रजकः, धावकः, निर्णेजकः வண்ணான்
रजकी, रजकवधूः வண்ணாத்தி
धावनं, क्षालनं, शोधनं, निर्णेजनं, मार्जनं துணி வெளுத்தல்
नापितः, वापकः, क्षुरकः, क्षुरी, मुण्डी மயிர் வினைஞர்
केशसाधकः, केशरचयिता கேசத்தை அழகுபடுத்துபவர்
केशसाधना, केशरचना கேசத்தை அழகுபடுத்துதல்
मुण्डनं மயிர் களைதல்
तन्तुवायः, कुविन्दः, पटकारः சேணியர்
ऊतिः ஊடு व्यूतिः பாவு
पटकर्म, वायनं, वाणिः, व्यूतिः நெய்தல்
उत्सारकः கூட்டத்தை விலக்குபவன்
क्षत्ता, सूतः குதிரைக்காசாரி
तैलिकः, चाक्रिकः வாணியர்
शौण्डिकः, मण्डहारकः, कल्यपालः மது தயாரிப்பாளர்

## त्रिंशः पाठः – பாடம் 30

### எண்கள் (1)

*(8ம் பாடத்தின் தொடர்ச்சி)*

| | पुं | स्त्री | नपुं |
|---|---|---|---|
| முதலாவது | प्रथमः | प्रथमा | प्रथमम् |
| இரண்டாவது | द्वितीय | द्वितीयाः | द्वितीयम् |
| மூன்றாவது | तृतीयः | तृतीया | तृतीयम् |
| நான்காவது | चतुर्थः | चतुर्थी | चतुर्थम् |
| ஐந்தவாது | पञ्चमः | पञ्चमी | पञ्चमम् |

| | | | |
|---|---|---|---|
| ஆறாவது | षष्ठः | षष्ठी | षष्ठम् |
| ஏழாவது | सप्तमः | सप्तमी | सप्तमम् |
| எட்டாவது | अष्टमः | अष्टमी | अष्टमम् |
| ஒன்பதாவது | नवमः | नवमी | नवमम् |
| பத்தாவது | दशमः | दशमी | दशमम् |

இந்த எண்களைக்கொண்டு சில பயிற்சிகளைப் பெறுவோம்.

तव मम च द्वे नेत्रे द्वौ हस्तौ द्वौ कर्णौ द्वौ पादौ एका नासिका च।

உனக்கும் எனக்கும் இரு கண்கள், இரு கைகள், இரு காதுகள், இரு கால்கள், ஒரு மூக்கு.

वामे हस्ते दक्षिणे हस्ते च पञ्च पञ्च अंगुलयः।

இடதுகையிலும், வலதுகையிலும் ஐந்து ஐந்து விரல்கள்.

अंगुलिषु प्रथमा ह्रस्वा स्थूला च भवति। तस्य अंगुष्ठः इति नाम।

விரல்களில் முதலாவது குட்டையாவும் பருத்ததாகவும் உள்ளது. அதற்கு அங்குஷ்டம் (கட்டைவிரல்) எனப்பெயர்.

द्वितीया तर्जनी नाम। सा दीर्घा।

இரண்டாவது தர்ஜனி (ஆட்காட்டிவிரல்) என்பது. அது நீண்டது.

तृतीया मध्यमा नाम। सा अंगुलिषु मध्यमा, दीर्घतमा च।

மூன்றுவது மத்யமா (நடுவிரல்) என்பது. அது விரல்களில் நடுவானதும், மிக நீண்டதுமாகும்.

चतुर्थी अनामिका नाम। सा तर्जनी इव दीर्घा, परं ईषत् तनुः।

நான்காவது அநாமிகா (மோதிரவிரல்) என்பது. அது தர்ஜனிபோல் நீண்டது. ஆனல் சிறிது மெலிந்தது.

पञ्चमी कनिष्ठिका नाम। सा सर्वाभ्यः अंगुलिभ्यः तनुः ह्रस्वा च।

ஐந்தாவது கனிஷ்டிகா (சுண்டுவிரல்) என்பது. அது எல்லா விரல்களையும் விட மெலிந்தது, குட்டையானதும் கூட.

वामे पादे दक्षिणे पादे च तथैव पञ्च अंगुलयः।

तासु अपि प्रथमा स्थूला, द्वितीया तृतीया चतुर्थी पञ्चमी च क्रमेण प्रथमां अपेक्ष्य तनवो भवन्ति।

*இடது காலிலும், வலது காலிலும் அப்படியே ஐந்து ஐந்து விரல்கள். அவைகளிலும் முதலாவது பருத்தது. இரண்டாவதும் மூன்ருவதும், நான்காவதும், ஐந்தாவதும் வரிசையாக முதலாவதைவிட மெலிந்தவை.*

परं हस्तयोः अंगुलीः अपेक्ष्य पादयोः अंगुलयः ह्रस्वाः एव।

*ஆனுல் கைகளின் விரல்களைப்பார்க்கிலும் கால்களின் விரல்கள் குட்டையே.*

ब्रह्मणः चत्वारि मुखानि अष्टौ नेत्राणि, अष्टौ कर्णाः, चतस्रो नासिकाः, द्वौ पादौ, चत्वारः हस्ताः।

*பிரும்மாவிற்கு நான்கு முகங்கள், எட்டு கண்கள், எட்டு காதுகள், நான்கு மூக்குகள், இரண்டு கால்கள், நான்கு கைகள்.*

सुब्रह्मण्यस्य षट् मुखानि, द्वादश नेत्राणि, द्वादश कर्णाः, षट् नासिकाः, द्वौ पादौ, द्वादश भुजाः च सन्ति।

*ஸுப்ரமண்யனுக்கு ஆறு முகங்களும், பன்னிரண்டு கண்களும், பன்னிரண்டு காதுகளும், ஆறு மூக்குகளும், இரண்டு கால்களும், பன்னிரண்டு கைகளும் இருக்கின்றன.*

विनायकः एकेन मुखेन द्वाभ्यां नेत्राभ्यां द्वाभ्यां कर्णाभ्यां पञ्चभिः हस्तैः च विराजते। गजस्य इव तस्य मुखे दीर्घा शुण्डा भवति। सा तस्य पञ्चमः हस्तः।

*விநாயகர் ஒரு முகத்துடனும், இரண்டு கண்களுடனும், இரண்டு காதுகளுடனும், ஐந்து கைகளுடனும் விளங்குகிருர். யானைக்குப்போல் அவர் முகத்தில் நீண்ட துதிக்கை உள்ளது. அது அவருக்கு ஐந்தாவது கை.*

दिशाः चतस्रः। प्रातः सूर्यं पश्यन् तिष्ठ। तव पुरतः प्राची दिशा। तव दक्षिणे दक्षिणा दिशा। तव पृष्ठे प्रतीची दिशा। तव वामे उदीची दिशा।

*திசைகள் நான்கு. காலையில் ஸூரியனைப் பார்த்துக் கொண்டிருப்பவனாக நில். உனக்கு முன் கிழக்கு திசை. உன் வலதுபுறத்தில் தெற்குத் திசை. உன் பின்புறத்தில் மேற்கு திசை. உன் இடதுபுறத்தில் வடக்குதிசை.*

भूतानि पञ्च, पृथिवी, जलं, अग्निः, वायुः, आकाश इति।

*ஐந்து பூதங்கள், மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என.*

मम कुटुंबे वयं अष्टौ भवामः।

*என் குடும்பத்தில் நாங்கள் எட்டு பேர்கள் இருக்கிறோம்.*

मम पितरौ, सोदरौ, सोदर्यः तिस्रः अहं च।

*என் பெற்றோர்களும், இரு சகோதரர்களும், சகோதரிகள் மூவரும், நானும்.*

मम सोदरीषु सीता मम अग्रजा, अन्ये द्वे मम अनुजे राधा शान्ता च।

*என் சகோதரிகளில் சீதை எனக்கு மூத்தவள், மற்ற இருவரும் எனக்குத் தங்கைகள், ராதாவும் சாந்தாவும்.*

मम गेहे चत्वारः अपवरकाः। तत्र प्रथमः विश्रामकक्षः। द्वितीयः पुंसां शयनकक्षः। तृतीयः स्त्रीणां शयनकक्षः। चतुर्थः अपवरकः पाकशाला भवति।

*என் வீட்டில் நான்கு அறைகள். முதலாவது ஓய்விடம். இரண்டாவது ஆண்கள் படுக்குமிடம். மூன்றாவது பெண்கள் படுக்குமிடம். நான்காவது சமையலறை ஆகிறது.*

विश्रामकक्षस्य द्वे द्वारे। ते वितते। तत्र त्रीणि महान्ति वातायनानि च सन्ति।

ஒய்விடத்தில் இரண்டு வாசல்கள். அவை அகன்றவை. அங்கு மூன்று பெரிய ஜன்னல்கள் உள்ளன.

## எண்கள் (2)

1. ஒவ்வொன்ருக இரண்டிரண்டாக மும்மூன்ருக என்றவாறு அமைக்கப் பயன்படும் அவ்யயச் சொற்கள் இவை

एकशः, द्विशः, त्रिशः, चतुःशः, पञ्चशः, षट्शः, सप्तशः, अष्टशः, नवशः, दशशः என்று எண்ணைக் குறிப்பிடும் சொல்லுடன் शः என்ற அவ்யயம் சேர்த்துச் சொல்கிருேம்.

एतानि फलानि त्रिशः विभज।

இந்தப் பழங்களை மும்மூன்ருகப் பிரித்துக்கொள்.

माणवकाः पञ्चशः समवेताः तिष्ठन्ति।

மாணவர்கள் ஐந்தைந்தாகக் கூடி நிற்கின்றனர்.

2. உள்ளதை கூறுகளாகப் பிரிக்க —

एकधा, द्विधा, त्रिधा, चतुर्धा, पञ्चधा, षोढा, सप्तधा, अष्टधा, नवधा, दशधा என்றவாறு முடிவில் धा சேர்த்து ஒரு வழக்குண்டு. இரண்டு கூருக, மூன்று கூருக, நான்கு கூருகப் பிரித்துக் கூறுவதற்கு இதனைப் பயன்படுத்தலாம் (षट् + धा என்று சேர்க்கும்போது षोढा என்று மாறுதல் அடைவது கவனிக்கத்தக்கது)

फलानि त्रिधा विभज। एकं अस्मै देहि, तत् तस्मै देहि। तृतीयं एतस्मै देहि।

பழங்களை மூன்ருகப் பிரி. ஒன்றை இவனுக்குக் கொடு. அதனை அவனுக்குக் கொடு. மூன்ருவதை இவருக்குக் கொடு.

3. ஒருதடவை இருதடவை மூன்று தடவை என்ற வழக்கில் कृत्वः, वारं என்று முடியும் அவ்யயச் சொற்கள் உண்டு.

| | | |
|---|---|---|
| ஒருதடவை | एकवारं | सकृत् |
| இரண்டுதடவை | द्विवारं | द्विः |
| மூன்றுதடவை | त्रिवारं | त्रिः |
| நான்குதடவை | चतुर्वारं | चतुः |
| ஐந்துதடவை | पञ्चवारं | पञ्चकृत्वः |
| ஆறுதடவை | षड्वारं | षट्कृत्वः |
| ஏழுதடவை | सप्तवारं | सप्तकृत्वः |
| எட்டுதடவை | अष्टवारं | अष्टकृत्वः |
| ஒன்பதுதடவை | नववारं | नवकृत्वः |
| பத்துதடவை | दशवारं | दशकृत्वः |

*என்றவாறு 1-2-3-4 எண்களுக்கு* एककृत्वः, द्विकृत्वः, त्रिकृत्वः, चतुःकृत्वः *என்று சொல்வதற்குப் பதிலாக* सकृत्, द्विः, त्रिः, चतुः *என்ற வழக்கிருப்பதை நினைவிற் கொள்ளவேண்டும்.*

घटिकाहरः षड्वारं नदति।

*கடிகாரம் ஆறுதடவை ஒலிக்கிறது.*

रामः त्रिवारं (त्रिः) भुंक्ते।

*ராமன் மூன்று தடவை சாப்பிடுகிறான்.*

*4. சில எண் சொற்கள் தனித்து பொருளையும் குறிப்படும்.*

सुमित्रा दशरथस्य द्वितीया द्वितीया।

*ஸுமித்ரை தசரதரின் இரண்டாவது மனைவி.*

*கணவனுக்கு மிக நெருங்கியவளானதால் மனைவி இரண்டாமவள். பிள்ளை முதலானோர் அவளுக்குப் பின்னரே. அதனால் மனைவியை* द्वितीया *என்றே குறிப்பிடுவர்.*

प्रथमा द्वितीया तृतीया ... .... चतुर्दशी पञ्चदशी என திதிகளின் வரிசைக்குப் பெயர். प्रथमा तिथिः, द्वितीया तिथिः என்றவாறு குறிப்பிடுவதற்குப் பதிலாக प्रथमा द्वितीया என்றே சொல்வர்.

शुक्लचतुर्थ्यां विनायकं पूजयन्ति।

சுக்ல (பக்ஷத்து) சதுர்த்தி (திதி)யில் விநாயகரை பூஜிக்கிறார்கள்.

विजयदशम्यां देवीपूजा समाप्तिं गच्छति।

விஜயா என்ற தசமி (திதி)யில் தேவீபூஜை முடிவடைகிறது.

5. शतं सहस्रं என்ற சொற்களுக்கு 100, 1000 என்ற பொருளிருந்தாலும் அளவிலடங்காதவற்றையும் குறிப்பிட (நூற்றுக் கணக்கானவர் ஆயிரக்கணக்கானவர் என்ற பொருளிலும்) இவற்றை வழங்குவர். ஆயிரம்பேர் கூடினர் என்றால் 999ஓ 1001ஓ அல்ல என்ற பொருளில்லை அல்லவா.

शरदः शतं जीव।

நூறாண்டுகள் வாழ்வாய்!

सहस्रं समाः गताः अशोकस्य शासनात्परम्।

அசோகரின் ஆட்சிக்குப் பிறகு ஆயிரம் ஆண்டுகள் கழிந்தன.

## अनुबन्धः प्रथमः - அனுபந்தம் 1

## भाषणे संस्कृतम् (१)

जात! शयनात् उत्थितो वा।

குழந்தாய்! படுக்கையிலிருந்து எழுந்துவிட்டாயா?

आं मातः! इतः एषः आगच्छामि।

ஆம் அம்மா! இதோ வருகிறேன்

दन्ताः शोधिता वा? (दन्तान् अशोधयः किम्?)

பற்கள் தேய்க்கப்பட்டனவா? (பற்களைத்தேய்த்தாயா?)

दन्तलेपिन्या अधुनैव शोधितवान् अस्मि। (अशोधयम्)

*பற்பசையால் இப்போதுதான் சுத்தப்படுத்தினேன்.*

मुखं क्षालितं वा? तर्हि आगच्छ, क्षीरं सशर्करं सज्जम्। पिब। अन्यथा तत् शीतं भवेत्।

*முகம் அலம்பப்பட்டதா? அப்படியானால் வா. பால் சர்க்கரையுடன் தயாராக உள்ளது. குடி. இல்லாவிடில் அது ஆறிவிடும்.*

मात : ! क्षीरं अद्य मास्तु। काफीं पिबामि।

*அம்மா! பால் இன்றுவேண்டாம். காபியைக்குடிக்கிறேன்.*

अस्तु। काफीं स्वीकुरु। शीघ्रं स्नाहि।

*ஆகட்டும், காபியை எடுத்துக்கொள். சீக்கிரம் குளி*

मातः ! रामः त्वरते। स एव प्रथमं स्नानं करोतु। (स्नातु)

*அம்மா, ராமன் அவசரப்படுகிறான். அவனே முதலில் குளிக்கட்டும்.*

त्वमपि शीघ्रं स्नाहि। पठनाय विलंबः भवति। अस्तु, कञ्चुकं आप्रपदीनं अन्यत् सर्वं सज्जं वा?

*நீயும் சீக்கிரம் குளி. படிக்கத்தாமதம் ஆகிறது. சரி, சட்டை கால்சராய் மற்றது அனைத்தும் தயாரா?*

सर्वं पूर्वेद्युः रात्रावेव अहं सज्जं कृतवान्।

*எல்லாவற்றையும் நேற்று இரவிலேயே நான் தயாராக்கியுள்ளேன்.*

अधोरुकं, अन्तर्युतकं च फेनशोधिन्या लिप्ते। कृपया ते क्षालय, शोषय, तापेन निर्वलीकं कुरु।

*அரைக்கால் சராயும், பனியனும் சோப்பு தடவப்பட்டுள்ளன. தயை செய்து அவற்றை (இரண்டையும்) அலசிவிடு. உலர்த்து. சூட்டால் சுருக்கமில்லாமல் செய் (அயர்ன் செய்).*

सायं क्रीडाकाले ते उपयोज्ये।

*மாலை விளையாட்டுவேளையில் அவை இரண்டும் பயன்படத்தக்கவை.*

अंब, समयः अत्येति। अनुमन्यस्व। विद्याशालां गच्छामि।

*அம்மா நேரம் கழிகிறது. அனுமதிப்பாய், பள்ளிக்கு செல்கிறேன்.*

समयोऽस्ति। मा त्वरस्व। गमने आगमने च जागरूको भव।

*நேரம் உள்ளது. அவசரப்படாதே. போவதிலும் வருவதிலும் கவனமுள்ளவனாக இரு.*

स्वस्ति गच्छामि।

*நல்லது. செல்கிறேன்.*

वत्स! सायं विद्याशालातः साक्षात् इह आगच्छ। मध्ये मा विलंबं कुरु।

*குழந்தாய், மாலை பள்ளிக்கூடத்திலிருந்து நேரே இங்கேவா. நடுவில் தாமதம் செய்யாதே.*

सायमाशं सज्जं करोमि। तत् भुक्त्वा अनन्तरं क्रीडायै गच्छ।

*மாலை உணவைத் தயாராகச் செய்கிறேன். அதனைச் சாப்பிட்டுவிட்டுப் பிறகு விளையாடச்செல்.*

मध्याह्ने अनुजं पश्य।

*மதியம் தம்பியைப் பார்.*

तस्य हस्ते लघ्वशः दत्तः। पानाय नीरमपि दत्तम्। स भोक्तुम् न जानाति। उपकुरु।

*அவன்கையில் சிற்றுண்டி கொடுக்கப்பட்டுள்ளது. குடிக்க ஜலமும் கொடுக்கப்பட்டுள்ளது. அவன் சாப்பிட அறிய மாட்டான். உதவிசெய்.*

# भाषणे संस्कृतम् (२)

தமிழில் மொழிபெயர்க்கவும்.

– किं तव नाम?
– मम नाम माधवः।
– किं तव पितुः नाम?
– विश्वेश्वरः इति तं कथयन्ति।
– किं तव जन्मस्थानम्? कुत्र तत् वर्तते?
– श्रीरङ्गं मे जन्मभूमिः। त्रिशिरःपुरस्य समीपे तत् वर्तते।
– तव गृहे के के सन्ति? भ्राता भगिनी च विद्येते वा?
– मम गृहे माता पिता, त्रयः भ्रातरः, एका अविवाहिता अग्रजा च विद्यन्ते। भ्रातृषु एकः ज्येष्ठः विवाहितः।
– किं तव वयः?
– मम वयः चतुर्दश वत्सराः। विजयदशमीतः पञ्चदशे वयसि पदं निदधामि।
– कुत्र ते वासः?
– त्रिशिरःपुरे आण्डार् वीथ्याम्।
– कस्मिन् विद्यालये पठसि? कस्यां कक्ष्यायाम्?
– विजयाविद्यालये पठामि। नवम्यां कक्ष्यायाम्।
– ज्येष्ठो भ्राता विवाहितः इति अवदः किल? किं सः उद्युक्तः? कुत्र?
– विवाहितो ज्येष्ठः टङ्कनकलां अध्यापयति, अस्माकं गृहे एव।
– तव कक्ष्यायां कति माणवकाः पठन्ति?
– कक्ष्यायां अ वर्गे पठामि। तत्रापि उपशतं माणवकाः पठन्ति।
– प्रतिवर्गं शतं माणवका वा? कुतः ईदृशः सङ्घातः?
– अद्यत्वे पिपठिषवः बहवः। विद्याशालाः संख्यायां न्यूनाः। कथमपि सर्वे प्रवेशं वाञ्छन्ति। तथा प्रयतनं कुर्वन्ति, यथा अधिकृताः न तान् उपेक्षेरन्।
– अस्तु। पाठनं सम्यक् प्रचलति वा?

– प्रचलति। अध्यापकाः यथायथं श्राम्यन्ति। तथापि एकैकोऽपि माणवः बोधितं सम्यक् अवधारयति वा इति परीक्षितुं अध्यापकस्य न अवकाशः।
– श्रम एव। एषा स्थितिः भूयसां विद्याशालानां उद्घाटनेन कदाचित् अपगच्छेत्।
– विद्याशालाः अधिका कल्पनीयाः। अध्यापकाः अपि अधिकतया नियोक्तव्याः। तथा सर्वकारः प्रयतेत इति आशंसे।
– अस्तु। पुनः पश्यामि। पितरं मदर्थे अभिवादय।

नाम *பெயர்* कथयन्ति *கூறுகிறார்கள்* जन्मस्थानं *பிறந்த இடம்* भगिनी *சகோதரி* अविवाहिता *மணமாகாதவள்* अग्रजा *முன்பிறந்தவள், அக்கா* विवाहिता *மணமானவள்* वत्सराः *ஆண்டுகள்* पदं निदधामि *காலடி வைக்கிறேன்* कक्ष्या *வகுப்பு* वर्गः *பிரிவு* उद्युक्तः *உத்தியோகத்தில் உள்ளவன்* टङ्कनकला *தட்டெழுத்துக்கலை, டைப்ரைடிங்* अध्यापयति *கற்றுக் கொடுக்கிறான்* उपशतं *கிட்டத்தட்ட 100* प्रतिवर्गं *ஒவ்வொரு பிரிவிலும்* संघातः *நெருக்கடி* पिपठिषवः *படிக்க விரும்புபவர்கள்* संख्यायां *எண்ணிக்கையில்* न्यूनाः *குறைந்தவை* प्रवेशः *நுழைவு அட்மிஷன்* वाञ्छन्ति *விரும்புகிறார்கள்* प्रयतनं *முயற்சியை* अधिकृताः *அதிகாரிகள்* न उपेक्षेरन् *கவனக்குறைவுடன் இருக்கமாட்டார்கள்* पाठनं *கற்பித்தல்* यथायथं *எப்படி நடக்கவேண்டுமோ அப்படி* श्राम्यन्ति *உழைக்கிறார்கள், சிரமப்படுகிறார்கள்* बोधितं *கற்பிக்கப்பட்டதை* अवधारयति *புரிந்துகொள்கிறான்* परीक्षितुं *சோதித்துப்பார்க்க* अवकाशः *நேரம் - வாய்ப்பு* भूयसां *எண்ணிக்கையில் அதிகமாயுள்ள* उद्घाटनं *திறப்பு* अपगच्छेत् *விலகும்* नियोक्तव्याः *பதவியில் அமர்த்தப்பட வேண்டும்* सर्वकारः *அரசாங்கம்* प्रयतेत *முயலும்* आशंसे *எதிர்பார்க்கிறேன்* मदर्थे *என்சார்பில்* अभिवादय *வணக்கத்தை தெரிவித்துக்கொள்.*

## भाषणे संस्कृतम् (३)

தமிழில் மொழிபெயர்க்கவும்

– अये वयस्य ! सुदिनम् !
– सुदिनं मित्र !
– क्रीडाक्षेत्रात् आगच्छसि वा?
– आम्। कथं त्वया ज्ञातम्?
– धूलीभिः धूसरितं ते मुखम्। श्रान्तः असि।
– आम्। अद्य द्वे होरे यावत् मया क्रीडितम्। तत्रापि शिक्ष्य कन्दुकक्रीडा सञ्चालिता। अनारतं धावनेन ईषत् श्रान्तः अस्मि।
– त्वं प्रतिदिनं एवं खेलसि वा?
– न न। विरामदिनेषु एवं क्रीडामि।
– सायं आशः स्वीकृतो वा?
– विद्याशालातः गृहं गतवान्। तत्र सायमाशः सज्जः अभवत्। तं खादित्वा क्रीडांगणं अगच्छम्।
– अस्तु। कदा ते पठनाय अवकाशः?
– सायं सप्तवादनात् नववादन पर्यन्तं, प्रत्यूषे पञ्चवादनात् सप्तवादनपर्यन्तं पठामि। पठनाय पर्याप्तः अवकाशः।
– कदा शयनं भजसे?
– रात्रौ नववादनतः प्रत्यूषे पञ्चवादनं यावत् स्वपिमि। प्रत्यूषे एव मे माता मां जागरयति। दन्तान् संशोध्य मुखं क्षालयित्वा देवं प्रणमामि। ततः पठनं करोमि।
– नियते काले पठसि। उचिते समये शयनाय गच्छसि। प्रत्यूषे एव शयनात् उत्थितः भवसि। श्लाघनीया ते दिनचर्या।
– श्रान्तः अस्मि। गृहं गच्छामि। आपृच्छे पुनः दर्शनाय।

क्रीडाक्षेत्रं, क्रीडाङ्गणं *விளையாடுமிடம்* धूलीभिः धूसरितं *தூசிகளால் நிறம்மங்கிய* श्रान्तः *களைத்தவனாக* होरा *மணி* क्रीडितं

விளையாடப்பட்டது शिक्यकन्दुकक्रीडा கூடைப்பந்தாட்டம் सञ्चालिता நடத்தப்பட்டது अनारतं ஓய்வின்றி धावनं ஓடுதல் विरामः ஓய்வு सायमाशः மாலை உணவு सप्तवादनात् ஏழு அடித்ததிலிருந்து, ஏழுமணியிலிருந்து वादनं (கடிகாரத்தில் மணி) அடித்தல் प्रत्यूषे விடியற்காலையில் पर्याप्तः போது மானது भजसे அடைகிறாய் जागरयति எழுப்புகிறாள் क्षालयित्वा அலம்பிவிட்டு नियते குறிப்பிட்ட उचिते தக்கதான उत्थितः எழுந்திருந்தவனாக श्लाघनीया பாராட்டத்தக்கது दिनचर्या அன்றாட நடவடிக்கை आपृच्छे சொல்லிக்கொள்கிறேன்.

## भाषणे संस्कृतम् (४)

प्रातः कालः। घटिकाहरः षड्वारं नदित्वा शान्तः। बालाः एतावता शयनीयेषु सुखं स्वपन्ति। माता ताम् उत्थापयति।

காலைவேளை. கடிகாரம் ஆறுதடவை ஒலித்து ஓய்ந்துள்ளது. சிறுவர்கள் இதுவரை படுக்கைகளில் சுகமாகத் தூங்குகின்றனர். தாயார் அவர்களை எழுப்புகிறாள்.

– राम ! उत्तिष्ठ।

ராமா எழுந்திரு.

– मातः - एषः उत्थितः अस्मि।

அம்மா இதோ எழுந்துவிட்டேன்

– रमे जागृहि। शयनात् अपसर। कालो गच्छति।

ரமா! எழுந்திரு. படுக்கையை விட்டு அகன்றுசெல். நேரம் போகிறது.

– अंब ! उत्थिता अहम्। क्षणं क्षमस्व।

அம்மா எழுந்துவிட்டேன் நான். சிறிது (ஒருநொடி) பொறுத்துக்கொள்.

– कृष्ण ! एतावता न उत्थितः असि। नेत्रे उन्मीलय। कालः अतीतः।

கிருஷ்ணு! இன்னம் எழுந்திருக்கவில்லையா! கண்களைத்திற. நேரம் ஆயிற்று.

– अंब। अहं स्वपिमि (निद्रामि)। उपरोधं मा कुरु।

அம்மா! நான் தூங்குகிறேன். தொந்தரவுசெய்யாதே.

– अरे ! निद्रामि इति वदसि। अथापि भाषसे। मिथ्यैव किल?

ஏண்டா! தூங்குகிறேன் என்று சொல்கிருய். ஆனுலும் பேசுகிருயே? பொய்தானே?

– अंब ! दयां कुरु। अपसर ! मां निद्रातुं अनुमन्यस्व।

அம்மா! தயை செய். அகன்று செல். என்னை தூங்கவிடு.

– अरे अलस ! मृषा नेत्रे मीलयन् असि। निमीलय। अन्यथा पितरं आह्वयेयम्।

ஏய் சோம்பேறி! சும்மா கண்களை மூடிக் கொண்டிருக்கிருய். (கண்களை) திற. இல்லாவிடில் அப்பாவைக் கூப்பிடுவேன்.

– अस्तु। पिता मां ताडयेत् इति भीषयसि। उत्थितः किं करिष्यामि?

இருக்கட்டும். அப்பா என்னை அடிப்பார் என்று பயமுறுத்துகிருய். எழுந்தவன் என்ன செய்யப்போகிறேன்.

– प्रातः काले शयनं दोषाय। उत्तिष्ठ।

காலை நேரத்தில் படுத்திருப்பது கெடுதலுக்கு (ஆகும்) எழுந்திரு.

– अरे राम ! शयनीयानि उपधानानि तथैव सन्ति वा? सर्वं तत् तत् तस्मिन् तस्मिन् स्थाने निवेशनीयम्। अरे तथा मा कुरु। तत् उपधानं आस्तरणे आवेष्ट्य परिष्कृत्य शयनीयस्थाने निधेहि।

ஏய் ராமா! படுக்கைகளும், தலையணைகளும் அப்படியே இருக்கின்றனவா? எல்லாம் அதது அந்தந்த இடத்தில் வைக்கப்படவேண்டும். ஏய்! அப்படி செய்யாதே! அந்தத்

தலையணையை விரிப்பால் சுற்றி சீர்செய்து படுக்கை வைக்குமிடத்தில் வை.

– शयनात् उत्थापनाय इयान् कोलाहलो वा?

படுக்கையிலிருந்து எழுப்ப இத்தனை தடபுடலா?

– कदा वा स्वयमेव तत् तत् तदा तदा ज्ञास्यथ।

எப்போதுதான் தானேயே அதை அவ்வப்போது செய்ய அறிந்து கொள்ளப்போகிறீர்கள்?

– मातः! मा कुप्य। सर्वं सम्यक् निहितम्। न किञ्चन विकीर्णम्।

அம்மா கோபித்துக்கொள்ளாதே. எல்லாம் நன்கு வைக்கப்பட்டுள்ளன. ஒன்றும் வாரியிறைக்கப்படவில்லை.

## भाषणे संस्कृतम् (५)

– आगच्छन्तु। शौचागारे शौचं कुर्वन्तु। दन्तान् सम्यक् धावयन्तु। दन्तधावने न त्वरा कार्या। दन्तचूर्णं अत्र विद्यते। पिष्टी तु तत्र अस्ति। यावत् अपेक्षितं तावत् आदेयम्। किमपि न वृथा करणीयम्।

வாருங்கள். கழிப்பறையில் மலசுத்தி செய்து கொள்ளுங்கள். பற்களை நன்கு தேயுங்கள். பல்தேய்ப்பதில் அவசரம் கூடாது. பற்பொடி இங்கே உள்ளது. பசை அங்கே உள்ளது. எவ்வளவு தேவையோ அவ்வளவு எடுத்துக் கொள்ளவேண்டும். ஒன்றையும் வீணாக்கக்கூடாது.

– दन्ताः शोधिता वा! कूर्चिकाः सम्यक् प्रक्षालयत। मुखं जलेन आपूर्य गण्डूषं कुरुत। जिह्वां अंगुलीभिः निर्लिखत। अन्यथा आस्यात् दुर्गन्धः न अपेयात्।

பற்கள் அலம்பப்பட்டனவா? பிரஷுகளை நன்கு அலம்புங்கள். வாயை நீரால் நிரப்பிக் கொப்புளியுங்கள். நாக்கை விரல்களால் தேய்த்து வழியுங்கள். இல்லாவிடில் வாயிலிருந்து கெட்டமணம் அகலாது.

– (प्रातः कालः। सप्तमी होरा। माता शयनात् उत्थितेभ्यः बालकेभ्यः प्रातःपानीयं ददाति। विद्यालयगमनाय तान् क्रमेण सज्जीकरोति।)

*காலை ஏழு மணி: தாயார் படுக்கையிலிருந்து எழுந்த சிறுவர்களுக்கு காலை பானத்தை தருகிறாள். பள்ளிக் கூடம்செல்ல அவர்களை முறைப்படி தயாராக்குகிறாள்*

– वत्साः ! दन्ताः धाविताः वा? मुखं क्षालितं वा?

*குழந்தைகளே! பற்கள் தேய்க்கப்பட்டனவா? முகம் அலம்பப்பட்டதா?*

– काफी, क्षीरं यूषः इति पेयं सज्जम्। पिबत यथाकामम्।

*காபி, பால், கஞ்சி என்று பானம் தயார். விருப்பப்படி சாப்பிடுங்கள்.*

– मातः ! मह्यं एतत् त्रयमपि न रोचते। क्षीरे बोर्नविटां विलाप्य देहि।

*அம்மா! எனக்கு இந்த மூன்றும் பிடிக்கவில்லை. பாலில் போர்ன்விடாவைக் கலந்து கொடு.*

– अस्तु। ददामि। एतत् रोचते, तत् न रोचते इति न वक्तव्यम्। यत् अस्ति तत् पेयम्। वयं न धनिनः। आयः मितः। अतः व्यये अवहिता भवेम। अद्य तत् अस्ति। ददामि। यदा न अस्ति तदा न शोकः कार्यः। अवधत्से वा?

*ஆகட்டும். தருகிறேன். இது பிடிக்கிறது, இது பிடிக்க வில்லை என்று சொல்லக் கூடாது. எது இருக்கிறதோ அது குடிக்கத்தக்கது. நாம் பணக்காரர்கள் அல்ல. வரவு அளவுக்குள்ளானது. அதனால் செலவில் கவனத்துடன் இருப்போம். இன்று அது உள்ளது. தருகிறேன். எப்போது இல்லையோ அப்போது வருத்தம் கூடாது. புரிந்து கொண்டாயா?*

– अंब ! क्षमस्व। क्षीरमेव पिबामि। न मे कोपः तापो वा।

அம்மா மன்னித்துக்கொள். (பொறுத்துக்கொள்) பாலையே குடிக்கிறேன். எனக்கு கோபமோ தாபமோ இல்லை.

– (पिता गृहात् बहिः वेदिकायां उपविश्य वार्तापत्रिकां पठन् आस्ते। गृहस्य अन्तः संपद्यमानं सल्लापं शृणोति। मन्दं हसति।)

(தந்தை வீட்டின் வெளியே திண்ணையில் உட்கார்ந்து செய்தித்தாளைப் படித்துக்கொண்டிருக்கிறார். வீட்டினுள் நடக்கின்ற பேச்சுவார்த்தையைக் கேட்கிறார். மெள்ளச் சிரிக்கிறார்.)

– राम! पितरं निवेदय। क्षीरपोटली न आगता। कुतः एवं इति विचारयतु।

ராமா! அப்பாவிடம் சொல். பால் பொட்டணம் வரவில்லை. ஏன் இப்படி என்று விசாரிக்கட்டும்.

– अम्ब! पिता वदति। पोटलीवितरकः अद्य विरामं अनुभवति। वयमेव क्षीरवितरणिकां गत्वा साक्षात् आदातुं अर्हामः।

அம்மா! அப்பா சொல்கிறார். பொட்டணம் விநியோகிப்பவர் இன்று ஓய்வில் உள்ளார். நாமே பால் டெபோ விற்குப் போய் நேரே பெற்றுக்கொள்ள வேண்டும்.

(पिता क्षीरवितरणिकां गत्वा क्षीरपोटलीं आनयति।)

(அப்பா பால் டெபோவிற்குச் சென்று பால் பொட்டணத்தைக் கொணர்கிறார்.)

– अये! मह्यं काफी सज्जा वा?

ஏய்! எனக்கு காபி தயாரா?

– क्षणं प्रतीक्षताम्। काफीफाण्टाय चूर्णं इदानीमेव चालिन्यां निहितं, उष्णोदकं च दत्तम्। पञ्चभिः दशभिः निमेषैः फाण्टः सज्जः भवेत्। पूर्वं संहितः फाण्टः अवसितः।

சிறிது (ஒரு நொடி) பொறுத்துக்கொள்ளுங்கள். காபிடிகாக்ஷனிற்காக பொடி இப்போதுதான் வடிக்கட்டியில்

போடப்பட்டுள்ளது. வென்னீர் ஊற்றப்பட்டுள்ளது. 5-10 நிமிடங்களில் டிகாக்ஷன் தயாராகிவிடும். முன்தயாரித்த டிகாக்ஷன் ஆகிவிட்டது.

– वत्साः ! स्नानं कुरुत। स्नानात् पूर्वं केशान् ईषत् तैलेन अभिमृशत। ततः स्नात। उष्णं उदकं सज्जम्। शीतं उदकं नलस्य अधः पाल्यां सज्जम्। एकैकशः स्नानशालां गच्छत।

குழந்தைகளே! ஸ்நானம் செய்யுங்கள். குளியலுக்கு முன் கேசங்களில் கொஞ்சம் எண்ணெய் தடவுங்கள். பிறகு குளியுங்கள். வென்னீர் தயார். குளிர்ந்த நீர் குழாயினடியில் வாளியில் தயார். ஒவ்வொருவராக குளியலறைக்குச் செல்லுங்கள்.

– अये! भवानपि स्नानाय सज्जः भवतु। मास्तु कालातिपातः। कार्यालयाय प्रस्थानकाले संरंभः मास्तु। भोजने त्वरा मास्तु।

ஓய்! நீங்களும் ஸ்நானத்திற்குத் தயாராகுங்கள். நேரத்தை தள்ளிப் போடுதல் வேண்டாம். காரியாலயத்திற்கு செல்லும்போது பரபரப்பு வேண்டாம். சாப்பாட்டில் அவசரம் வேண்டாம்.

## अनुबन्धः द्वितीयः

## அனுபந்தம்-2

ஒவ்வொரு மொழியும் அதற்கென்றமைந்த சில இலக்கண முறைகளைப் பின்பற்றுகிறது. ஸம்ஸ்கிருதமும் அவ்வாறே சில முறைகளைப் பின்பற்றுகின்றது. சில வேறுபாடுகள் கவனத்திற்கு உரியவை.

1. புல்லிங்கம், ஸ்திரீலிங்கம், நபும்ஸகலிங்கம் என்பவை பொதுவாக ஆண்பால், பெண்பால், அஃறிணை இவற்றைக் குறிப்பிட்டாலும் பல சொற்கள் இந்தக்கட்டில் அடங்காதவை. मित्र नपुम्ஸகலிங்கச் சொல். நண்பன், நண்பி என்று ஆண் பெண் இருவரையும் குறிக்கும். मित्रः என்ற ஆண்பால் சொல்

உண்டு. அது ஸூர்யனை மட்டும் குறிக்கும். நண்பனை அல்ல. वृक्षः புல்லிங்கம், लता ஸ்திரீலிங்கம், ஆனால் அஃறிணையில் குறிப்பிடப்பெறும் மரத்தையும், கொடியையும் குறிக்கும். वृक्षं लतं என்று எழுத முடியாது. அதனால் முதலில் கற்கும் போதே இந்தச்சொல் எந்த லிங்கத்தில் வந்துள்ளது என்பதை நினைவில் பதித்துக்கொள்வது அவசியம்.

2. ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் வேற்றுமை உருபுகள் தனித்து உள்ளன. அதனால் பெயர்ச்சொல்லுடன் இணைப்பது எளிது. राम से, राम ने, राम को, राम के लिए. With Rama, by Rama, to Rama, for Rama. ஆனால் தமிழிலும், ஸம்ஸ்கிருதத்திலும் அவை பெயர்ச்சொல்லுடன் இணைந்தே பயன்படுத்தப்படுகின்றன. இணைக்கும்போது பெயர்ச் சொல்லிலும் வேற்றுமை உருபிலும் மாறுதல் ஏற்படுகின்றது. ராமனை, அவற்றை, ராமனுக்காக - அவற்றிற்காக रामं, विद्वांसं, रामाय, हरये, मधुने அதனால் முதலிலேயே ஏழு வேற்றுமைகளிலும் ஒருசொல் அடையும் மாறுபாடுகளைக் கற்கவேண்டி வருகிறது.

3. வினைச்சொற்களுக்கு ஆண்பால் பெண்பால் மாறுபாடு இல்லை. सः करोति, सा करोति, तत् करोति। செய்கிறான், செய்கிறாள், செய்கிறது என்பதுபோல் பால் மாறுபாட்டமில்லை. ஹிந்தியில் உத்தமபுருஷனிலும் (தன்னிலை). மத்யம புருஷனிலும் (முன்னிலை) பால்மாறுபாட்டம் உண்டு. तुम करती, हो, मैं करती हूँ, वह करता है என்று வரும். ஸம்ஸ்கிருதத்தில் அங்கும் மாறுபாடு கிடையாது. (ஸம்ஸ்கிருதம் பயிலுபவர்களில் சிலர் ஹிந்தி கற்றவர்கள். அவர்கள் இந்த மாறுபாட்டை மனதில் பதித்துக் கொள்வது அவசியம்)

மொழிப்பயிற்சியைத் தொடங்கும் போதே இந்த மாறுபாடுகளைக் கவனித்து மனதில் வாங்கிக்கொண்டால் பயிற்சி எளிதாக அமையும். பேசும்போது தவறுகள் நேர்ந்தால் பொருட்படுத்தமாட்டார்கள். எழுதும்போது தவறு நேர்ந்தால்

*சற்று உறுத்தும். அதனுல் படித்துப் பழகுவதைப்போல் எழுதிப்பழகுவதும் அவசியமே.*

## अभ्यासः प्रथमः — பயிற்சி - 1

तमिलपदानि संस्कृतीकुरुत।

त्वं *பந்திற்காக* स्पृहयसि। *(மாதிரி* कन्दुकाय)

माता *பெண்ணிற்கு* फलं यच्छति।

*உனக்கு* एतत् फलं रोचते किम्?

*பசுமாடு புல்லுக்காக* इतस्ततः चरति।

माणवकः *பள்ளிக்கூடத்திலிருந்து* क्रीडांगणं गच्छति।

आचार्यः *காவேரி ஆற்றில்* स्नानं करोति।

एतावत् पठनेन *போதும்।*

गुरो ! *உங்களை வணங்குகிறேன்।*

गजाः *கரும்புத்துண்டங்களை* खादन्ति।

करयोः *பத்து விரல்கள்* सन्ति।

## अभ्यासः द्वितीयः — பயிற்சி - 2

उचितान् क्रियाशब्दान् योजयत।

कृष्णाय नवनीतं — *(மாதிரி* रोचते)

ग्रामात् अहं —

रामुः संस्कृते भाषणं —

विद्यया विनयः —

अहं सिंहात् —

तृषितः जलं —

कृष्णः नद्यां —

नदीनां जलं रुचिरं —

रामः चक्षुर्भ्यां —

## अभ्यासः तृतीयः — பயிற்சி - 3

नखरेखामध्ये दत्तं क्रियापदं उचितेन पुरुषवचनेन योजयत।
*நகக்குறியிடையே கொடுக்கப்பட்டுள்ள வினைச்சொற்களைத் தக்க புருஷவசனங்களுடன் இணைத்து எழுதுக.*

गुरुः अद्य द्वितीयं पाठं (बोध) (*மாதிரி* बोधयति)
अहं प्रतिदिनं मातरं (नम)। त्वं वने (विहर)।
अद्य रामभागवतः गानमन्दिरे (गा)
अश्वः प्रयाणाय सज्जः (भव)
त्वं मोदकाय (स्पृह)। अहं रामाय (कुप्)।
मम वृथा विवादः न (रोच)
हरिश्चन्द्रः असत्यवचनात् (जुगुप्)
वने मृगाः भयं विना (चर)

## अभ्यासः चतुर्थः — பயிற்சி - 4

1. दत्तानि क्रियापदानि योजयित्वा वाक्यानि रचयत।
   चरति, आगच्छति, आनयसि, आहरामि, वदति, अवतरति, भाषते, लिहसि, प्रभवति, नमामि

2. तमिलभाषायां अर्थं ब्रूत।
   अध्यापकः, गुरौ, पत्रात्, कदाचित्, तृषितस्य, स्वसा, जनकेन, लेखिन्या, अश्वेभ्यः, प्रायः

3. संस्कृते अनुवदत।
   *பூந்தோட்டம், நாவல்பழம், பேருந்து, இருகாதுகளால் பிடிக்கவில்லை, மயில், எங்களிடமிருந்து, கோபிக்கிறாய், உனக்கு அவனிடம்.*

## अभ्यासः पञ्चमः - பயிற்சி 5

अधः दत्तानां शब्दानां निर्दिष्टासु विभक्तिषु रूपाणि दत्त। तमिलि अर्थं च लिखत।

*கீழே தந்துள்ள சொற்களுக்குக் குறிப்பட்ட விபக்திகளில் ரூபங்களைத்தந்து பொருள் எழுதுக.*

युष्मत् (त्वं) चतुर्थी, गौरी-पञ्चमी, रमा-तृतीया, वारि-चतुर्थी, उदकं-षष्ठी, आकाशः-सप्तमी, प्रजा-चतुर्थी, धनं-द्वितीया, मृत्तिका-तृतीया, विद्या-पञ्चमी।

## अभ्यासः षष्ठः - பயிற்சி 6

अधः दत्तेषु वाक्येषु कानिचन पदानि नखरेखामध्ये भवन्ति। तानि उचितायां विभक्तौ लिखत।

*கீழே கொடுக்கப்பெற்ற வாக்கியங்களில் சில சொற்கள் நகக்குறி இடையே உள்ளன. அவற்றை தக்க விபக்தியில் எழுதுக.*

अहं प्रातः (सूर्य) वन्दे।
नृपतिः युद्धे (शत्रु) जयति।
मम शिक्षकः (अस्मत्) व्यायामं बोधयति।
बालकः दन्तैः (शष्कुली) खादति।
बिडालः (मूषक) अनुधावति।
(गिरि) निकषा नदी प्रवहति।
माता (वाम) हस्तेन बालं आलिङ्गति।
(दुष्ट) बालं गुरुः शिक्षयति।
(राम) विना लक्ष्मणः कदापि न गच्छति।
गोपालः धेनुं (दण्ड) ताडयति।

## अभ्यासः सप्तमः – பயிற்சி 7

संस्कृते अनुवदत।

*கோபம் ஆசையிலிருந்து உண்டாகிறது*
*நான் உப்பரிகையிலிருந்து வீதியைப் பார்க்கிறேன்*
*பிறரைத் துன்புறுத்துவது பாபத்திற்கு ஆகிறது*
*நான் தாயையும் தந்தையையும் வணங்குகிறேன்*
*மாணவர்களுக்குத் தருவதற்காகப் பழங்களை வாங்குகிறேன்.*
*உன் முன் அந்தப் புத்தகம் உள்ளது*
*நீ எதற்காக இப்படி வருந்துகிறாய்?*
*வேகமாக ஓடாதே.*
*தேசத்தின்பொருட்டு மஹாத்மாகாந்தி எல்லாவற்றையும் துறந்தார்.*
*மனிதர்களில் பாரதி உயர்ந்தவர்.*

## अभ्यासः अष्टमः – பயிற்சி 8

तमिलि अनुवदत।

आर्य! स्वागतम्। उपविशतु भवान्।
अहं पचने निपुणा भवामि।
कपिः वेगेन उत्पतति।
उद्यमेन सर्वे अर्थाः सिध्यन्ति।
मृगाः मृगैः सह चरन्ति, एवं नराः नरैः सह चरन्ति।
धेनोः दुग्धं स्वादु, अतः बाल! शीघ्रं पिब।
आचार्य! वयं चत्वारः गणितं पठामः, भवान् सम्यक् बोधयतु।
धर्मस्य हेतोः रामः वनं अगच्छत्। सीता अपि तं अन्वगच्छत्।
पत्रप्रेषालयस्य पुरतः मम गृहं अस्ति।

तमिलि पदानां अर्थं वदत।

मानवेन, अस्मभ्यं, क्षुधया, अतिपरिचयः, वित्तागारः, खाद्यं, उपरिष्टात्, रक्षागारः, तरणिः, आविलं, सङ्गच्छते, निरामयं,

सन्ध्यायां, दुह्यमानासु, आसन्ना, अत्यर्घं, आसक्ता, धूर्ततमः, कीलकं, मधुरतमम्।

संस्कृते अनुवदत।

*மலரும்போது, கெடுதிவிளைவிப்பவர்களால், பந்து விளையாட்டில், காட்டுவிலங்குகள், விளையாட்டுவீரன், பாராட்டு, உனக்கு முன்னர், வேலைக்காரன், உப்பரிகை, கோபிக்கிறான், விலைக்கு வாங்குகிறான், உளுந்து, மக்கள், கொடை, துறவி, சூதாடி, தட்டான், கடைக்காரன், சேணியன், நாக்கு.*

## अभ्यासः नवमः – பயிற்சி 9

अधो निर्दिष्टैः ऋकारान्तैः पदैः अन्वितानि वाक्यानि रचयत?

*கீழ்கண்ட* ऋकारान्त *சொற்களைக் கொண்டு வாக்கியங்களை அமைத்துப் பொருள் கூறவும்.*

पितरं, मातृभिः, स्वस्रे, दुहित्रा, नेतारं, दातारं, याचितारः, उपदेष्टा *(உபதேசம் செய்பவன்)* विद्यादात्रे, भर्तुः

## अभ्यासः दशमः – பயிற்சி 10

अधो निर्दिष्टेषु वाक्येषु अपूर्णान् नखरेखामध्यगतान् पदान् उचितया विभक्त्या उचितेन वचनेन च योजयत।

*கீழே குறிப்பிடப்பட்டுள்ள வாக்கியங்களில் நகக்குறியின் நடுவில் உள்ள நிறைவுறாத சொற்களைத் தக்க விபக்தி வசனங்களுடன் சேர்க்கவும்.*

अहं (पितृ) आज्ञया ग्रामं अगच्छम्।

(दातृ) याचकाः उपगच्छन्ति।

वत्सः (मातृ) अन्वधावत्।

कृष्णस्य (स्वसृ) सुभद्रां अर्जुनः पर्यणयत्।

जनैः निर्वाचिताः अद्यत्वे देशस्य (शास्तृ) भवन्ति।
रामेण सहितः सुग्रीवः (भ्रातृ) वालिनं युद्धाय आह्वयत्।
तौ (भ्रातृ) वृद्धं (पितृ) प्राणमताम्।
(भ्रातृ) सुग्रीवाय वाली अद्रुह्यत्।
(मातृ) लालितः शिशुः सुखं स्वपिति।
अहं (होतृ) विप्राय दक्षिणां यच्छामि।

## अभ्यासः एकादशः – பயிற்சி 11

तमिलि अनुवद।

*தமிழில் மொழி பெயர்க்கவும்*

राजा होत्रे दक्षिणां यच्छति।
शास्तारः जनान् धर्म्ये मार्गे नियच्छन्ति।
जामातरं श्वशुरः प्रियेण उपहारेण अभिनन्दयति।
भ्रात्रा सह लक्ष्मणः वनं अगच्छत्।
धाता ब्रह्मा यथापूर्वं इमं लोकं असृजत्।
मात्रे यशोदायै कृष्णः मोदं अवर्धयत्।
दुहितरं राधां वृषभानुः अन्वनयत्।
दातुः धनिकात् महत् धनं याचकः प्रतीक्षते।
भ्राता भ्रात्रा सह न विवदति।
याता ननान्दा स्वसा इति मे बह्वयः उपकर्त्र्यः।

## अभ्यासः द्वादशः – பயிற்சி 12

अधो निर्दिष्टेषु विशेषणेषु विशेष्येषु च एकत्र अनिर्दिष्टे विभक्तिवचने युक्ताभ्यां विभक्तिवचनाभ्यां संयोजयत। तमिलि अनुवदत

*இழே தரப்பட்டுள்ள விசேஷணங்களிலும் விசேஷ்யங்களிலுட ஓரிடத்தில் விபக்தியும் வசனங்களும் தரப்படவில்லை பொருத்தமான விபக்தி வசனங்களுடன் சேர்த்து எழுதவும் தமிழில் பொருளும் தரவும்.*

मधुरान् शब्द –।
काण – नारी।
मूकाय बाल –।
सुरभीणि पुष्प –।
धनिक – नरेभ्यः।
निपुण -- पण्डितेषु।
पूति – प्रदेशः।
पूर्ण – हृदयम्।
अधिक – वेगस्य।
मृदु – शयने।

हिंस्र – मृगाणाम्।
परुष – वचनेन।
कठिने शयन –।
वृद्धाय गुरु –।
चतुर – भाषणेन।
सिकतिला – भूमौ।
रिक्तायां पेटी –।
मूल्याय अल्प –।
विरलं देश –।
शान्त – आश्रमपदम्।

## अभ्यासः त्रयोदशः – பயிற்சி - 13

अधः केचन विशेषण विशेष्य प्रयोगाः दत्ताः। तेषु ये समाने लिङ्गे समानायां विभक्तौ समाने वचने वा न सन्ति तान् परिशोध्य साधून् प्रयोगान् लिखत। अनुवदत।

*கீழே சில விசேஷண விசேஷ்யங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றில் பொருந்தாத லிங்க-விபக்தி - வசனங்களில் உள்ளவற்றைத் திருத்தி எழுதுக. பொருள் தருக.*

निपुणाभ्यां बालेभ्यः। चतुरया रामेण। उष्णेन जलेन। शीतलेन वायवे। अन्धः नारी। अल्पं मूल्यम्। दीनेन बालेन। वृद्धेभ्यः नारीभ्यः। दरिद्राय माणवकाभ्यां। उन्नते पर्वतेषु। उत्तमे कुले। आढ्ये तस्मात्। कृशैः बालाभिः। मृदुला भूमिः। मधुरं जलं। अधिकेन हिमैः। रिक्तां पेटीम्। स्थूलेन दण्डाभ्याम्। विरलेषु धनिके। मधुरं इक्षुरसः। नीलं आकाशः। रक्तः सूर्यः। हरितं तृणानि। शान्तं गृहम्। दयालुः हरिः।

விடைகள்:

## अभ्यासः प्रथमः

*முன் தந்துள்ள அப்பியாஸங்களின் விடைகளை வரிசையாகத் தருவோம். நீங்கள் எழுதிய விடைகளுடன் சரிபார்க்கவும்*

कन्दुकाय, तनयायै (पुत्र्यै), तुभ्यं, गौः (धेनुः) तृणाय, विद्यालयात् (पाठशालायाः), कावेर्यां नद्यां, अलम्, भवन्तं (त्वां) नमामि, इक्षुखण्डान्, दश अंगुल्यः।

## अभ्यासः द्वितीयः

रोचते, आगच्छामि, करोति, वर्धते (जायते), बिभेमि, पिबति, स्नाति, भवति, पश्यति।

## अभ्यासः तृतीयः

बोधयति, नमामि, विहरसि, गायति, भवति, स्पृहयसि कुप्यामि, रोचते, जुगुप्सते, चरन्ति।

## अभ्यासः चतुर्थः

1. गजः वने चरति। बाला गृहात् पाठशालां आगच्छति। त्वं पुस्तकं आनयसि। अहं कूपात् जलं आहरामि। सः सत्यं वदति। रामः गिरेः अवतरति। रामः मया सह भाषते। त्वं पायसं लिहसि। सः लेखनाय प्रभवति। (गिरेः नदी प्रभवति) अहं गुरुं नमामि।

2. *ஆசிரியர், குருவிடத்தில், கடிதத்திலிருந்து, எப்போதாவது (ஒருசமயம்), தாகம் உள்ளவனுக்கு, சகோதரி, தந்தையால் (தந்தையுடன்), பேனாவால், குதிரைகளின்பொருட்டு (குதிரைகளிடமிருந்து), அனேகமாக.*

3. उद्यानं, जंबूफलं, महोन्दुः, कर्णाभ्यां, न रोचते, मयूरः, अस्मभ्यं, कुप्यसि, तव (ते, तुभ्यं) तस्मिन्।

| | | |
|---|---|---|
| तुभ्यं-ते | युवाभ्यां-वां | युष्मभ्यं - वः |
| गौर्याः | गौरीभ्यां | गौरीभ्यः |
| रमया | रमाभ्यां | रमाभिः |
| वारिणे | वारिभ्यां | वारिभ्यः |
| उदकस्य | उदकयोः | उदकानां |
| आकाशे | आकाशयोः | आकाशेषु |
| प्रजायै | प्रजाभ्यां | प्रजाभ्यः |
| धनं | धने | धनानि |
| मृत्तिकया | मृत्तिकाभ्यां | मृत्तिकाभिः |
| विद्यायाः | विद्याभ्यां | विद्याभ्यः |

## अभ्यासः षष्ठः

सूर्यं, शत्रुं (शत्रून्), मह्यं (अस्मभ्यं), शष्कुलीं, मूषकं, गिरिं, वामेन, दुष्टं, रामं, दण्डेन।

## अभ्यासः सप्तमः

कोपः कामात् जायते। अहं प्रासादात् वीथीं पश्यामि। परेषां पीडनं पापाय भवति। अहं मातरं पितरं च नमामि। माणवकेभ्यः वितरणाय फलानि क्रीणामि। तव पुरतः (पुरस्तात्) तत् पुस्तकं विद्यते। त्वं कस्य हेतोः (किमर्थं) एवं शोचसि? वेगेन मा धाव। देशस्य अर्थे महात्मा गान्धी सर्वमपि अत्यजत्। मनुष्येषु भारती उत्तमः।

## अभ्यासः अष्टमः

*ஐயா ! நல்வரவாகுக. தாங்கள் உட்காருங்கள். நான் சமைப்பதில் தேர்ந்தவளாக இருக்கிறேன். குரங்கு வேகத்துடன் ஓடுகிறது. முயற்சியால் எல்லா பொருள்களும் கிட்டுகின்றன. மான்கள் மான்களுடன் செல்கின்றன, அப்படியே மனிதர்கள் மனிதர்களுடன் செல்கின்றனர். பசுவின் பால் இனியது.*

அதனால் குழந்தாய் ! சீக்கிரமாகக் குடி. ஆசிரியரே ! நாங்கள் நால்வர் கணிதம் படிக்கிறோம், நீங்கள் நன்கு போதிப்பீர்களாக. தர்மத்தின் பொருட்டு ராமன் காட்டிற்குச் சென்றான், ஸீதையும் அவரைப் பின்தொடர்ந்தாள். தபால் அனுப்பும் பணியகத்தின் எதிரில் உன் வீடு உள்ளது.

மனிதனால், எங்கள்பொருட்டு, பசியால், அதிகப்பரிசயம், வங்கி (பணவைப்பிடம்), உணவுப்பண்டம், மேல், காப்பகம், கப்பல், கலங்கிய, பொருந்துகிறான் (கூடுகிறான்), நோயின்மை (க்ஷேமம்), ஸந்திவேளையில், கறக்கப்படுகின்றவைகளில், நெருங்கியுள்ள, அதிக விலையுள்ளது, ஈடுபட்டவள், அதிகப்போக்கிரி, மூளை, அதிக இனிப்புள்ளது.

विकसति सति, अपकारिभिः कन्दुकक्रीडायां, वन्याः मृगाः, (श्वापदाः) क्रीडावीरः, प्रशंसा (पुरस्कारः), तव पुरतः सेवकः (भृत्यः, कर्मकरः), प्रासादः, कुप्यति, क्रीणाति, माषः, प्रजाः, दानं, यतिः, कितवः, स्वर्णकारः, आपणिकः, तन्तुवायः, जिह्वा।

## अभ्यासः नवमः

त्वं पितरं नम।

रामः मातृभिः त्रिभिः आशिषा योजितः।

कृष्णः स्वस्रे सुभद्रायै आभरणं अयच्छत्।

जनकः दुहित्रा सीतया सह सभां आगच्छत्।

जनः उत्तमं नेतारं अनुसरति।

दीनः मनस्विनं दातारं याचते।

याचितारः दत्तेन अल्पेन न तुष्यन्ति।

उपदेष्टा शिष्याय हितं उपदिशति।

विद्यादात्रे भवते नमः।

भर्तुः प्रियं प्रिया पत्नी कांक्षते।

## अभ्यासः दशमः

पितुः दातारं, मातरं, स्वसारं, शास्तारः, भ्रातरं, भ्रातरौ पितरं, भ्रात्रे, मात्रा, होत्रे

## अभ्यासः एकादशः

*அரசன் ஹோமம் செய்பவருக்கு தக்ஷிணையைத் தருகிறார்.*

*ஆள்பவர்கள் மக்களை அறத்திற்பட்ட வழியில் அடக்குகிறார்கள்.*

*மாப்பிள்ளையை மாமனார் பிரியமான ஸம்மானப் பொருளால் மகிழ்ச்சியடைச் செய்கிறார்.*

*சகோதரருடன் லக்ஷ்மணன் காட்டிற்குச் சென்றான்.*

*உலகைப்படைக்கும் பிரும்மா முன்போல் இந்த உலகைப்படைத்தார்.*

*தாயான யசோதைக்குக் கண்ணன் சந்தோஷத்தை வளர்த்தான்.*

*பெண்ணை ராதையை விருஷபானு தன்வழிப்படச் செய்தார்.*

*கொடுப்பவரான செல்வந்தரிடமிருந்து பொரும்பெருளை யாசகன் எதிர்பார்க்கிறான்.*

*சகோதரன் சகோதரனுடன் விவாதிப்பதில்லை*

*ஓர்படி, நாத்தனார், ஸகோதரி என்று எனக்குப்பல உதவியாளர்கள்.*

## अभ्यासः द्वादशः

शब्दान्, काणा, बालाय, पुष्पाणि, धनिकेभ्यः, निपुणेषु, पूतिः, पूर्णं, अधिकस्य, मृदुनि, हिंस्राणां, परुषेण, शयने, गुरवे, चतुरेण, सिकतिलायां, पेटयां, अल्पाय, देशं, शान्तम्.

## अभ्यासः त्रयोदशः

निपुणाभ्यां बालाभ्यां (निपुणेभ्यः बालेभ्यः) चतुरेण रामेण, उष्णेन जलेन, शीतलेन वायुना (शीतलाय वायवे) अन्धा नारी, अल्पं मूल्यम्

दीनेन बालेन, वृद्धाभ्यः नारीभ्यः, दरिद्राभ्यां माणवकाभ्यां, (दरिद्राय माणवकाय) उन्नते पर्वते, (उन्नतेषु पर्वतेषु), उत्तमे कुले, आढ्ये तस्मिन्, (आढ्यात् तस्मात्) कृशाभिः बालाभिः, मृदुला भूमिः, मधुरं जलं, अधिकेन हिमेन, (अधिकैः हिमैः) रिक्तां पेटीम्, स्थूलेन दण्डेन (स्थूलाभ्यां दण्डाभ्यां) विरलेषु धनिकेषु, (विरले धनिके) मधुरः इक्षुरसः, नीलः आकाशः, रक्तः सूर्यः, हरितं तृणं, (हरितानि तृणानि), शान्तं गृहं, दयालुः हरिः।

## ஸம்ஸ்கிருதஸ்ரீ பாடமாலா பாகம் - 2

## மாதிரி வினாத்தாள்

1. *ஸம்ஸ்கிருத பதங்கள் தருக.*
*கொடுப்பவன், குடிப்பவன், மாப்பிள்ளை, மகன், பேரன், அளித்தான், மகிழ்ந்தார், எடுத்துக்கொள்கிறேன். ஒரு கண் குருடானவன், நீர்பெருக்கு, நிறுத்திவைக்கிறார், மௌனமாக, வெகுநாட்களாக, பேசாதே, வழிபட, நீராட, பார்க்க, கக்கிவிட்டு, அதட்டிவிட்டு, வெடி.*
2. *ஸம்ஸ்கிருதத்திலுள்ள விசேஷ்யச் சொற்களுக்கேற்பத் தமிழில் தந்துள்ள விசேஷணச் சொற்களை ஸம்ஸ்கிருதத்தில் எழுதவும்.*
*உயர்ந்த* पर्वते, *இனிய* औषधैः, *குளிர்ந்த* जलं, *ஆழ்ந்த* समुद्रे, *பெருத்த* फलात् *மெதுவான* शयनात्, *கடினமான* शिला *புகழ்பெற்ற* नृपाय, *தரித்திரனான* याचकाय, *அழகிய* पुष्पाणि
3. *கீழ்க்கண்ட தாதுக்களுக்கு லட்டிலும் லோட்டிலும் மத்யம புருஷனில் ரூபங்கள் தருக.*

खादति, जयति, चरति, आगच्छति, वसति

4. *ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்க்கவும்.*

*பாரத தேசத்தில் ஜனநாயக அரசு நடக்கிறது. தகப்பன் மகனைக் கொஞ்சுகிறார். வித்யைக்கு ஈடான கண் இல்லை.*

மரங்களுக்குக் காற்றிலிருந்து பயம். பிழைப்பு இல்லாத நாட்டில் வசிக்க மாட்டேன். பள்ளிக்கூடத்தில் ஓய்வு நேரம் எப்போது? மாலை நேரத்தில் சிறிதுநேரம் தேகப்பயிற்சி செய்கிறேன். என் அண்ணா காசிக்குச் செல்லப்போகிறார். இன்று ஸங்கீத ஸபையில் ராமன் பாடப்போகிறார். என் வகுப்பில் 5-6 மாணவர்கள் பரிசு பெறுகிறார்கள். கடலைவிட வானம் பெரிது. ராமன் கண்ணனைக் கன்னத்தில் அடிக்கிறான். தூய்மையற்ற நீரைத் தள்ளிவிடு. ராமு தொழிற்சாலையை நன்கு நடத்துகிறான். வெண்ணெய்ப் பாத்திரத்தில் கண்ணன் கையை வைக்கிறான்.

5. கீழ்தந்துள்ள தாதுச்சொற்களை அமைத்து வாக்யங்கள் எழுதுக.

अपश्यं, खेलामः, पठेयुः, व्यायच्छामि, अनुभवति

6. கீழ்கண்டவற்றில் விசேஷ்யச் சொல்லின் லிங்கத்திற்கேற்ப எண்களுக்குப் பதிலாக எண்களின் சப்த ரூபங்களைத் தருக.

दशरथस्य 4 पुत्राः। पाण्डवाः 5 भ्रातरः। गुहस्य 6 मुखानि। 4 बालेभ्यः फलं यच्छति। 9 ग्रहेभ्यः नमः कुर्मः। अहं 2 कराभ्यां फलं नयामि। विष्णुः 4 भुजैः 4 आयुधानि धरति। मह्यं 6 रूप्यकाणि यच्छ। रामस्य 3 भ्रातरः। रथः 4 अश्वैः चलति।

7. தனித்தனியே உள்ள இருவாக்கியங்களை त्वा விகுதி சேர்த்து இணைக்கவும்.

रामः बालं पश्यति, फलानि तस्मै यच्छति।
कमला जलं नयति, वृक्षान् सिञ्चति।
माता कन्दुकं ददाति, बालं क्रीडायै चोदयति।
गुरुः पुस्तकं ददाति, रामं बोधयति।
दरिद्रः वीथ्यां अटति, भिक्षां याचते।

8. கீழ்க்கண்ட தாதுக்கள் அவற்றின் எதிரே கொடுக்கப் பட்டுள்ளது உபஸர்க்கங்களுடன் இணையும்போதம் ஏற்படும் பொருள் மாறுதலைக் குறிப்பிடுக.

१. चरति.— वि, परि, सं
२. भवति — प्र, अनु, सं
३. हरति — प्र, वि, परि, व्या
४. तिष्ठति — अनु
५. गच्छति — आ, सं, निर्

கடந்த பல ஆண்டுகளில் இதன் மூலம் பயிற்சி பெற்றவர்கள் தாமே ஆங்காங்கு ஆரம்ப வகுப்புகளை தொடங்கி எமது சேவையில் பங்கு கொண்டுள்ளனர். அவர்களது ஈடுபாடு பெரிதும் போற்றத்தக்கது.

## ஸம்ஸ்கிருதஸ்ரீ பாடமாலா

ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் வெளியான பாடங்களை மட்டும் தனியே தொகுத்து ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா என்ற 7 பாகங்கள் கொண்ட தொகுப்பு வெளியாகியுள்ளது. இவை அவ்வப்போது பெறும் அனுபவங்கள் மூலம் மறு பரிசீலனைக்கு உட்படுத்தப் பட்டுள்ளன. தற்போது முதல் பாகத்தின் பத்தாவது பதிப்பு வெளியாகிறது. இவற்றின் துணைகொண்டு ஸம்ஸ்க்ருதத்தை எழுத்துப் பயிற்சியில் தொடங்கி காவியங்கள் வரை எளிதில் கற்கலாம்.

ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா என்ற தொகுப்பை பெறுபவர்கள் அவற்றில் வெளியாகியுள்ள பாடங்களைப் பயின்று பாடங்களின் இறுதியில் கொடுக்கப் பெற்றுள்ள பயிற்சிகளைத் தாமே எழுதி புக் போஸ்டு மூலம் Book-post Posted under clause 114 (8) of P & T Guide : PUPILS EXERCISE என்று உறைமீது குறிப்பிட்டு (உறையின் வாயை ஒட்டாமல்) எமக்கு அனுப்பினால் திருத்தி அனுப்புகிறோம். சந்தேகங்களுக்கு விளக்கம் தருகிறோம். இந்தச் சேவையைப் பெற விரும்புபவர் தபால் செலவிற்கென ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாகம் ஒன்றுக்கு ரூ 20-00 அனுப்பவும். மேலும் தாங்கள் விரும்பும் தொகையை நன்கொடையாக அளிக்கலாம்.

ஸம்ஸ்க்ருத எஜுகேஷன் ஸொஸைடி,
98-99, லஸ்சர்ச் ரோடு,
சென்னை 600 004.

# ஸம்ஸ்கிருதத்தை எளிதில் கற்க எமது பாட நூல்கள்

| | விலை ரூ. |
|---|---|
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா | |
| 1 — 7 பாகங்கள் ஒவ்வொன்றும் | 25.00 |
| ஸம்ஸ்க்ருத அகராதி தமிழ் - ஆங்கிலப் பொருளுடன் | 120.00 |
| தாதுமாலா (300 தாதுக்கள்) (முதல் பாகம்) | 80.00 |
| சப்தமஞ்ஜரீ | 25.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ ஆண்டிதழ்கள் | |
| 13 முதல் 21 வரை | 15.00 |
| 22 முதல் 25 வரை | 20.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ வெள்ளிவிழா மலர் | 20.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ மாதப் பத்திரிகை | 4.00 |
| ஆண்டு சந்தா | 40.00 |
| ஆயுள் சந்தா | 400.00 |

புத்தகம் அனுப்ப தபால் செலவு தனி
விவரமறிந்து முன் பணம் அனுப்பவும்

தொடர்பு கொள்ள முகவரி :-

**ஸம்ஸ்கிருத எஜுகேஷன் ஸொஸைடி,**

148-150, லஸ் சர்ச் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 600 004.

*Lasertypeset & Printed at :*
V.K.N. ENTERPRISES,
8/1, Dr. Rangachari Road, Mylapore, Chennai-4, ✆ 2495 0775.